உ

கணபதி துணை

# வீரவனப்புராணம்

திரிசிரபுரம் மஹாவித்துவான்

**ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்**

வடமொழி முதல்நூலிலிருந்து மொழிபெயர்த்தியற்றியது

பதிப்பாசிரியர்

மகாமகோபாத்தியாய, தாக்ஷிணாத்திய கலாநிதி

**டாக்டர் உ.வே. சாமிநாதையர்**

**அவர்கள்**

மகாமகோபாத்தியாய

டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்

பெசன்ட் நகர் - சென்னை – 600 090.

1999

உ

கணபதி துணை

# வீரவனப்புராணம்

திரிசிரபுரம் மஹாவித்துவான்

**ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்**

வடமொழி முதல்நூலிலிருந்து மொழிபெயர்த்தியற்றியது.

பதிப்பாசிரியர்

மகாமகோபாத்தியாய, தாக்ஷிணாத்திய கலாநிதி

**டாக்டர் உ.வே. சாமிநாதையர்**

அவர்கள்

மகாமகோபாத்தியாய

டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்

பெசன்ட் நகர் - சென்னை-600 090.

1999

# இப்புத்தகத்திலடங்கியவை



-----------

# பதிப்பாளர் குறிப்பு

நலமலி பரையே ஆதியே பிடியே
வழுத்துநர் எய்பினில் வைப்பே
புலமலி யோரைஞ் சத்திக ளாகிப்
புவனமெங் கணும்படைப் பாதிக்
குலமலி தொழிலோர் ஐந்துநன் றமைந்து
குலவுற முடித்துநிற் பவளே
அலமலி வீரை வீரசே கரர்பால்
அருமை யேயுனைத் தொழுதேன். **(வீரவனப்புராணம்)**

வீரவனம் என்னும் இத்தலம் புதுவயலிலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ள சிற்றூர். ஒரு சிவத்தலம். சுவாமி: வீரசேகரர். இவர் வீரை மரத்தின் நிழலில் எழுந்தருளியிருத்தலால் வீரைவனம் என்று பெயர் பெற்றது. சோழன் பூசித்த தலம். இந்தத் தலத்திற்குத் தேவாரம் இல்லை.

ஸ்ரீ மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இதற்குப் புராணம் தமிழில் செய்திருக்கிறார்கள். கோயில் திருப்பணி மிகமிக அற்புதமாக அமைந்துள்ளது.

வீரவனக் கோயிலில் இறைவன் சந்நிதானத்தில் புராணத்தைப் பிள்ளையவர்கள் அரங்கேற்றினார்கள். அவ்வமயம் தன வைசியப் பிரபுக்கள் பிள்ளையவர்களுக்குத் தக்க சம்மானம் செய்து சிறப்பித்தார்கள்.

அத்தலத்தில் புதைந்திருந்த சிவலிங்கப் பெருமானைக் கிழங்கு என்று எண்ணித் தன்னுடைய கருவியினால் குத்தித் தழும்புபடச் செய்து பின் அறிவு வரப்பெற்று உண்மையை உணர்ந்த வீரன் என்னும் வேட்டுவன் இரங்கியதாக உள்ள,

''என்னையாள் தரவிக் கானகத் திருந்தார்
இருந்ததை யறிந்திலன் அந்தோ
பொன்னைநேர் சடிலத் திறைவனார் இங்குப்
பொருந்திய தறிந்திலன் அந்தோ
அன்னையே பொருவும் அறவனார் இங்ஙன்
அமர்ந்ததை அறிந்திலன் அந்தோ
முன்னையூழ் கொல்லோ பலருமுள் ளிரங்க
முடித்தனன் முடிந்திலேன் என்பான்.''

என்னும் செய்யுளும், அப்பொழுது அவனுக்கு இரங்கிய சிவபெருமான் ஓர் அந்தண உருவத்தோடு தோன்றிக் கூறிய விடையாக உள்ள

"பரம்பரன் முடியில் தழும்புறச் செய்தேம்
பாவியேம் என்றுநீ கவலல்
பிரம்படித் தழும்பும் வில்லடித் தழும்பும்
பெயர்த்தெறி கல்லடித் தழும்பும்
வரம்பறு சிறப்பில் செருப்படித் தழும்பும்
வயங்கிய வாள்வெட்டுத் தழும்பும்
நிரம்பிய வியலிற் பரிக்குரத் தழும்பும்
நிகழுறு பூசைவாய்த் தழும்பும்"

"குடம்புரை செருத்தற் றேனுவோ டடுத்த
குழக்கன்றின் குளப்படிச் சுவடும்
தடம்புயத் தொருவன் கதையடிச் சுவடும்
தாங்கிய நமக்கிதோர் பொருளோ
இடம்பட உணரின் இன்னமும் பலவால்
இசைப்பது நமக்குமுற் றாது
திடம்படு மிவைபோற் பலவுநந் தமக்குத்
திருவிளை யாட்டெனத் தேரிதி"

என்னும் செய்யுட்களும் படித்து இன்புறற்பாலன.

(வாள்வெட்டுத் தழும்புற்ற தலம் வாட்போக்கி; குதிரைக் குளம்புத் தழும்புற்ற தலம் தென்திருமுல்லைவாயில்; பூனைவாய்த் தழும்புற்ற தலம் மாயூரத்துக்கருகிலுள்ள குன்றமருதூர்; பசுக்கன்றின் குளம்படிச் சுவடு பெற்ற தலம் திருப்போரூர்.)

இந்த அருமையான சிறந்த நூலை டாக்டர் ஐயரவர்கள் 1903 ஆம் ஆண்டு தமிழ் உலகிற்கு அளித்தார்கள். இப்பதிப்பு தமிழ் வளர்ச்சித்துறை அரிய நூல்களை வெளியிட நிதியுதவி வழங்கும் திட்டத்தின் கீழ் இந்நூல் வெளிவருகின்றது. நூல்நிலையத்தின் சார்பாகத் தமிழ்வளர்ச்சித் துறையினர்க்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை நூல்நிலைய வெளியீடாக ஒரு பதிப்புப் பதிப்பித்துக் கொள்ள அனுமதி அளித்த தியாகராஜ விலாசத்தாருக்கு நன்றி.

இப்பதிப்பில் கதைச் சுருக்கம், செய்யுள் முதற் குறிப்பகராதி, தலபுராணங்களின் அட்டவணை முதலியன சேர்க்கப்பட்டுள் ளன. தலபுராணங்களின் அட்டவணையை எழுதிக் கொடுத்தவர் திரு. சாயிராமன் அவர்கள்.

இந்நூலை நன்கு அச்சிட்டுக் கொடுத்த ஸ்ரீ விக்னேஷ் பிரிண்ட்ஸ் அச்சக உரிமையாளர் திரு. கார்த்திகேயன், திரு. இரவிக்குமார் அவர்களுக்கு நன்றி.

பெசன்ட் நகர் — **வித்துவான் சு. பாலசாரநாதன்**
சென்னை-90 — ஆராய்ச்சித்துறை
*6.9.1999* — டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம்.

கணபதி துணை

# முகவுரை

***வீரவன***மென்பது, திருப்பெருந்துறைக்கு மேற்றிசையில் 10 நாழிகைவழித்தூரத்தில் உள்ளதொரு சிவஸ்தலம்; வில்வாரணியம், வீராரணியம், வீரை, வீரையூர், அளகை, சாக்கைக்கோட்டை, சாக்களூர், சாக்கையென்றும் வழங்கும்.

**விநாயகர் திருநாமங்கள் :** சுந்தரவிநாயகர், அழகு விநாயகர் என்பன.

**ஸ்வாமியின் திருநாமங்கள் :** வீரசேகரநாதர், திருமுடித் தழும்பரென்பன.

**அம்பிகையின் திருநாமங்கள்:** உமை, உமையம்பிகை, உமாம்பிகை, உமையாண்டாளென்பன.

**தீர்த்தத்தின் திருநாமங்கள் :** சிவகங்கை, சோழதீர்த்தம், சத்திய தீர்த்தமென்பன.

ஸ்தலவிருக்ஷம் : வீரவிருக்ஷம். இந்தமரத்தின் பெயர் தென்மொழியில் வீரையென வழங்கும். இது முன்னொரு காலத்திற் சுகுணபாண்டியனென்னும் அரசனுக்குண்டாகிய ஐயத்தை நீக்கும்பொருட்டு ஸ்ரீ வீரசேகரநாதருடைய திருவருளால் பலாமரமாகிப் பின்பு தன்னுருவம் பெற்ற மகிமையையுடையது.

**வழிபட்டுப்பேறுபெற்றோர்கள் :** வீரனென்னும் வேடர் பெருமான், அவன் மனைவியாகிய **சுமதி**, காவிரிப்பூம் பட்டினத்தரசனாகிய **கண்டனென்னும்** சோழன், அவன் தேவியாகிய சுசீலை, அவன் புதல்வனாகிய **வீரசேகரச்சோழன், சுகுணபாண்டியன், குபேரன், அந்தண**னொருவன், **ஆய**னொருவன், **திருமால், இராமன்,** திருப்பெருந்துறை அந்தணர்களாகிய **முந்நூற்றுவர்** முதலியோர்கள்.

மேற்கூறிய விசேடங்களையுடையதும், மிகப்பழமை யானதும், புகழ்பெற்றதுமாகிய இந்த வீரவனத்தின் புராணத்தை வடமொழி முதல் நூலிலிருந்து பெயர்த்து இனிய செய்யுள் நடையாக இயற்றியவர், கவிஞர்பெருமானும் மஹா வித்துவானும் என்னுடைய தமிழாசிரியருமாகிய திரிசிரபுரம் **ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்.**

இப்புராணம், முதலில் அழகுவிநாயகக்கடவுளின் துதி முதலிய பல துதிகளடங்கிய கடவுள் வாழ்த்தும், அவையடக்கமும், சிறப்புப் பாயிரமும் முறையே அமையப்பெற்றுப் பின்னர், திருநாட்டுப்படல முதலிய பதினான்கு படலவுறுப்புக்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. இதன் செய்யுள் தொகை, 704.

இப்புராணத்தின் இனிய செய்யுள் நடையும், பொருளமைதியும், நூலாசிரியர் சரித்திரங்களைச் சொல்லிக் கொண்டு போகுமழகும், இடையிடையே பலவகையாகப் புலப்படுத்தியிருக்கும் சிவோத்கருஷங்களும், சிவஸ்துதிகளும், உண்மை நாயன்மார்களுடைய சரித்திரங்களை அங்கங்கே உபமானங்களாக எடுத்துக்காட்டியிருக்கும் பகுதிகளும், இடையிடையே அமைத்திருக்கும் பத்திச்சுவையும், வினாவிடைகளும், வேறு ஸ்தலபுராணகதைகளுள் அரியனவற்றை எடுத்துக் கூறியிருக்கும் பாகங்களும், பிறவும் மிகப்பாராட்டற்பாலன.

இங்ஙனம் பெருமைவாய்ந்த வீரவனப்புராணத்தை அரும்பதவுரையுடன் பதிப்பித்தலில் எனக்குப் பொருட்கவலை இல்லாமலிருக்கும்படி செய்த, ஸ்ரீ உமாம்பிகாஸமேத ஸ்ரீ **வீரசேகரநாத பக்தஜன சபை**யாருடைய பெருந்தகைமை மிக மதிக்கற்பாலது.

இங்ஙனம் தூண்டி ஆதரிப்போர் சிலரேனுமிருப்பின் மஹோபகாரிகளாகிய இந்நூலாசிரியரியற்றிய அரிய பெரிய இனிய நூல்கள் பலவற்றுள் இதுவரையில் அச்சிடப்படாமலிருப்பவைகளைப் பதிப்பித்து யாவரும் எளிதிற்பெற்றுப் படித்துப் பயனடையும்படி செய்தற்கு அனுகூலமாக இருக்கும். திருவருள் துணைசெய்யவேண்டும்.

இவ்வரியநூலைப்பதிப்பிக்கும்படி செய்த நல்வினையின் பால் மிக்க நன்றியறிவுடையேன்.

**(வெண்பா)**

துன்றுபலத் தோளான் சுகுணவழு திக்குமரம்
ஒன்றுபல வாம்வீரை யூர்முறையொன் -றின்றுபல
ஆயதிறும் பூதோ வளகைப் பரன்கருணை
ஏயதெனின் முற்றாத தென்.

இங்ஙனம்

1903

**வே. சாமிநாதையன்.**

உ

சிவமயம்

இப்புராணத்தைப் பதிப்பிக்கமுயன்றவர்கள்
இன்னா ரின்னாரென்பது

இடையாற்றுமங்கலம் ம-ன-ன-ஸ்ரீ

# வை. அநந்தராமையரியற்றிய செய்யுட்கள்.

* * *

## அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பூமேவு மன்னமுகை யன்னமுங்கா ணுதமுடிப் புராண ரென்றுந்
தாமேவு முடித்தழும்பர் வீரசேகரரெனும்பேர் தம்மைத் தாங்கி
மாமேவு முமையொடுவீற் றிருந்தருளும் வீரவன மான்மி யத்தைத்
தூமேவு நைமிசத்திற் சவுனகா தியர்க்குரைத்தான் சூத மேலோன்.

அன்னவன்முன் வடமொழியி லுரைத்தபுராணத்தை யெளிதருந்த மிழ்க்கட்,
சொன்னயமும் பொருணயமுந் தொடைநயமு நடைநயமுந் துலங்கச் செய்தான்,
பன்னவனா ரென்றிடிற்சி ராமலையிற் றமிழ்செய்தவப் பயனாத் தோன்று,
மன்னவனற் குணக்கடலா மீனாட்சி சுந்தரநா வலவ ரேறே. (2)

சாலநயஞ் சார்ந்திடுமிப் புராணகாப் பியமான தமிழ்நூ றன்னைக்,
கோலமுறு திருத்தளியின் வளந்தெரித்தல் போற்பெயர்கொள் கோயி லூரின்,
பாலமருஞ் சிதம்பரநற் குரவனிடை ஞானநூல் பயின்றொ ழுக்கான்,
ஞாலமிசை யிசைமேவிப் புதுவயல்வா ழழகப்ப நாமத் தோனும். (3)

கூறுபுது வயல்வாழ்வோன் வினைதீர்த்த வேளபுதல்வன் குறைவிலாச்சீ,
ரேறுநய சுகுணமிகு மியல்புடையான் வீரப்ப னெனும்பே ரோனும்,
வீறுபெற முயன்றெழுதா வெழுத்தினியை வித் துறப வித்த தற்குப்,
பேறுபுக ழெனப்பெற்றா ரிவர்களுடை முயற்சியெம்மாற் பேசற் பாற்றோ. (4)

-----

# கதைச் சுருக்கம்

## 1. நாடும் நகரமும்.

சீருஞ் சிறப்பும் பொருந்தியது பாண்டி வளநாடு. பாண்டி நாட்டின் சிறப்புக்கள் பல. சிவபெருமான் அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்யும் பேற்றினை இந்நாடு பெற்றதுடன்; சிவபெருமான், உமாதேவியார், முருகக்கடவுள் என்னும் மூவரால் அரசாட்சி செய்யப்பெறும் பெருமையினை யும் பெற்றது. இந்நாட்டின்கண் மூவர் தேவாரப் பாடல்களைப் பெற்ற சிவப்பதிகள் பல. இந்நாட்டில் குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை, நெய்தல் ஆகிய நிலங்கள் தத்தமக்கேற்ற சீரொடு சிறந்து திகழும். இந்நாட்டில் வீரைமாநகர் என்னும் சிவப்பதி ஒன்று சிறந்து விளங்குகின்றது. அப்பதி அளகை, சாக்கை, சாக்கோட்டை முதலிய வேறு பெயர்களையும் பெற்று விளங்கும். அந்நகரின்கண் சோலைகளும் பொய்கைகளும், மலர்ப்பொழில்களும் மலிந்து விளங்கும். அகநகரும் இடை நகரும் புறநகரும் அமைய வேண்டிய சிறப்புக்களெல்லாம் அமையப்பெற்றுத் திகழும். வேளாளர் தெரு, வைசியர் தெரு, அரசர் தெரு, மறையவர் தெரு, ஆதிசைவர் தெரு முதலிய தெருக்கள் அமையப்பெற்ற அந்நகர் எங்கும் மடாலயங்களும் கல்விச்சாலைகளும், அறச்சாலைகளும், தண்ணீர்ப்பந்தர்களும் செறிந்து விளங்கும். ஊருக்கு நடுநாயகமாக வீரசேகரப் பெருமானுடைய திருக்கோயில் சிறந்து விளங்கும். அக்கோயில் திருமதில் திருக்கோபுரம் பலவகை மண்டபங்கள் எல்லாம் அமையப்பெற்றுச் சிவலோகமாகத்திகழும். அந்நாளில் சோழ பாண்டிய மன்னர்களால் செய்யப்பெற்ற திருப்பணிகளைத் தனவணிகச் செல்வர்கள் இடைவிடாது திருப்பணி செய்தலின் வீரசேகரப்பெருமான் திருக்கோயில் என்றுங்குன்றாச் சிறப்புடன் இலங்கி மிளிரும்.

## 2. நைமிசவனம்

நைமிசாரணியம் என்னும் நைமிசக்காடு வட இந்தியாவிலே இருக்கின்றது. அக்காடு முனிவர்கட்கு இருப்பிடமானது. முனிவர்கள் பலர் ஒன்றாகத் திரண்டு தவம் வேள்வி முதலியவைகளைச் செய்து கொண்டு அங்குத்தான் நாட்களைக் கழிப்பார்கள். ஒரு நாள் சூதமுனிவர் என்னும் பெயரினை யுடைய பெருமுனிவர் அக்காட்டிற்கு எழுந்தருளினார். அவர் புராணங்கள் யாவற்றையும் நன்கு கற்றறிந்தவர். அதனால்

பூவுலகில் உள்ள சிவப்பதிகள் எல்லாவற்றின் வரலாறுகளையும் அவர் ஐயமற அறிந்திருந்தார். பெருஞ்சிறப்புப் பொருந்திய அந்தச் சூத முனிவரை நைமிசவன முனிவர்கள் பூசித்து வழிபாடுகள் செய்து போற்றினார்கள். சூத முனிவர் தம்மைப் போற்றிய முனிவர்கட்கு வாழ்த்துரை வழங்கினார். அந்த முனிவர்கள் சூதமுனிவரைப் பார்த்துப், ''பிறவியைப் போக்குதற்குச் சிவபெருமானுடைய திருவடிகளைப் போற்றி வழிபடுதலே சிறந்தது என்று நாங்கள் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் உணர்ந்திருக்கின்றோம். பூவுலகில் சிவப்பதிகள் பல இருக்கின்றன. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றாலும் ஒருங்கே சிறந்த ஒரு சிவப்பதியினை எங்கட்குத் தெரிவிப்பின், நாங்கள் அங்குச் சென்று இறைவனை வழிபட்டு வீடு பேற்றை அடைவோம்.'' என்று சொல்லி வேண்டிக்கொண்டார்கள்.

### வீரவனம்

சூதமுனிவர் சிறிதுபோது சிவபெருமானுடைய திருவடிகளை உள்ளத்தில் எண்ணியிருந்தார் பிறகு நைமிசவன முனிவர் களைப் பார்த்து, ''ஓ முனிவர்களே! உரைக்கின்றேன் கேளுங்கள். சிறப்புமிக்க பாண்டிவளநாட்டிலே வெள்ளாற் றிற்குத் தெற்கே, திருப்பெருந்துறைக்கு மேற்கே கண்ட தேவிக்குவடக்கே, சமிவனம் என்னும் கோயிலூருக்குக் கிழக்கே வீரவனம் அளகை என்னும் பெயர்களை உடைய ஒரு சிவப்பதி இருக்கின்றது. அச்சிவப்பதிக்கு நிகரான சிவப்பதி இப்பூலகில் வேறு ஒன்றும் இல்லை. அச்சிவப்பதியை உள்ளத்தால் எண்ணுவோரும் வாக்கால் மொழிவோரும் வீடு பேற்றினை எளிதிலே அடைவார்கள். பொன்னுலகத்தில் வாழ்கின்ற தேவர்கள் அப்பதியினைச் சிவலோகம் என்று கூறுவார்கள். அந்த வீரவனத்தின் பெருமையைக் காந்த புராணத்தின் சனத் குமாரசங்கிதை சாற்றுகின்றது. அதனை யான் உங்கட்கு உரைக்கின்றேன் மெய்யன்போடு கேட்பீர்களாக'' என்று இயம்பி வீரவனப்பெருமையை விளம்பலானார்.

## 3. வீரசேகரர் திருமுடித் தழும்பு பெற்றது.

### வீரவனத்து மரங்கள்

அந்த வீரவனமானது முன்னாளில் அரசு எலுமிச்சை அத்தி, கொன்றை, நெல்லி, கண்டில்வெண்ணெய், முந்திரிகை, புரசு, வெட்பாலை, கோங்கு, காட்டத்தி, புன்னை, யா, மூங்கில்,

மந்தாரம், விரசு, பூவரசு, கூவிளம், நொச்சி, வேம்பு, பச்சிலை, விளா, வன்னி, பூவத்தி, சண்பகம், ஞாழல், பாரிசாதம், பனை, அசோகு, ஆல்அழிஞ்சில், கதலி, பேரீந்து, மதிங்கம், ஈந்து, ஏழிலைம்பாலை, வேல், சுரபுன்னை, இலந்தை, மருது, திமிசு, வெள்ளிலோத்திரம், குருந்து, இருப்பை, பூல், காவீரம், சந்தனம், நாவல், புன்கு, குங்கிலியம், தமாலம், வீழி, வெண்ணெய், சே, புளி, குருக்கத்தி, பாடலம், தேக்கு முதலிய மரங்களால் சூழப் பெற்றிருந்தது.

## வீரன்

அந்த வீரவனத்தின் அக்கினி மூலையிலே; அரையோசனை தொலைவிலே, வேடர்கள் தலைவன் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் வீரன். அவன் மிகுந்தபேராற்றல் உடையவன் அவனுக்குத் தாடி சடைமுடி முதலியன வளர்ந் திருந்தன. அவன் ஒருநாள் வனத்துட் கிழங்கு கொணரும் கருத்திற் புறப்பட்டான். அவனுடைய நாய் அவனைப் பின்தொடர்ந்தது. அவனுடைய கையிலே கிழங்கு முதலியவற்றைத் தோண்டுதற்குரிய இரும்புக் கருவி இருந்தது. அவ்வீரன் வீரவனத்திலே புகுந்தான். வீரை மரம் ஒன்று ஓரிடத்தில் வானளாவ வளர்ந்து நின்றது. அம்மரத்தின் அடியிலே புற்று ஒன்று அமைந்திருந்தது. அப்புற்றிலே வள்ளிக்கொடி ஒன்று தோன்றி வீரை மரம் முற்றும் மூடிப் படர்ந்திருந்தது.

கிழங்குள்ள கொடிகளைத் தேடித்திரிந்த வீரன் புற்றையும் வள்ளிக் கொடியையுங்கண்டான். அவனுக்குச் சிவபிரானுடைய திருவருள் கைகூடுங்காலம் நெருங்கியது. உள்ளத்தூய்மை யுடைய அந்த வீரனுடைய உள்ளத்திலே தீய எண்ணங்கள் ஒன்றும் இல்லை. அந்தப் புற்றின் அடியில் சிவலிங்கம் ஒன்று இருத்தலை அவன் அறியான். கிழங்கு தோண்ட எண்ணிய வீரன் கையில் இருந்த இரும்புப் படையினால் புற்றினை இடித்தான். புற்று இடிபட்டது இரும்புப்படை சிவலிங்கத்தின் திருமுடியில் சிறிது தாக்கியது. தாக்கப்பட்ட இடத்தில் இருந்து இரத்தம் வெளிப்பட்டது. இரத்தத்தைக் கண்ட வீரன் மயங்கி மூர்ச்சித்து மண்மேல் வீழ்ந்தான்.

## வீரன் மனைவி வருதல்

மூர்ச்சித்து விழ்ந்த வீரன் அப்படியே நெடுநேரம் கிடந்தான். வீரனைத் தொடர்ந்து வந்த நாய் நல்லறிவுள்ளது. தன் தலைவனுக்கு ஏதோ தீங்கு நேரிட்டுவிட்டது என்று அஃது ஒருவாறு அறிந்துகொண்டது அதற்கு வருத்தம் உண்டாகியது. வீரனை முகர்ந்து பார்த்தது. காலால் வருடியது. அங்கும் இங்கும் ஓடியது; கத்தியது. பிறகு அது வீரனுடைய வீட்டை நோக்கி ஓடியது. வீரன் மனைவியைக்கண்டு துன்பமுகங் காட்டியது. நாயின் நிலைமையை வீரன் மனைவி கண்டாள். நம் தலைவனுக்கு ஏதோ தீங்கு நேரிட்டிருக்கிறது. இன்றேல் இஃது இவ்வாறு தனியே கலக்கத்துடன் ஓடிவருதற்குக் காரணம் என்ன? என்று எண்ணி உள்ளங் கலங்கினாள். நாய் வழிகாட்டத் தன் தலைவன் விழுந்துகிடக்கும் இடத்தை அடைந்தாள் தலைவனைக் கண்டாள். உள்ளம் பதைத்தாள். வயிற்றிலே அடித்துக்கொண்டு அழுதாள். உயிர் இருக்கின்றதா இல்லையா என்று மூக்கின்மேல் விரலை வைத்துப் பார்த்தாள். உயிர்ப்புக் காற்று வருதலை உணர்ந்தாள். தலைவன் இறக்கவில்லை யென்று அறிந்தாள். இவ்வாறு நேர்தற்குக் காரணம் யாதென்று ஆராய்ச்சி செய்யத்தொடங்கினாள். வள்ளிக்கிழங்கு இருத்தலைப் பார்த்தாள். அதன் அண்மையில் குருதிக் கறைப் பட்டிருத்தலையுங் கண்டாள்.

## வீரன் மனைவி சிவலிங்கத்தைக் காண்டல்

குருதிக் கறையை அவள் பார்த்ததும் இவ்விடத்தில் ஏதோ புதுமை இருக்கிறதென்று எண்ணினாள். வள்ளிக்கிழங்கைப் பெயர்த்தாள். அங்கு எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானைக் கண்டாள். அவளுக்கு மிகுந்த அச்சம் உண்டாகிவிட்டது. இரத்தம் வெளிப்பட்டிருத்தலையும் பார்த்தாள். அதனால் உள்ளம் வருந்திப் புலம்பினாள். வள்ளிக்கிழங்கை எடுத்தற்குத் தோண்டும்போது இறைவனுடைய திருமுடிமேல் இரும்புக் கருவி பட்டுக்காயம் ஏற்பட்டதற்காக அவள் பலவாறு நொந்தாள். சிவலிங்கத்தின் திருமுடியில் வெளிப்படும் இரத்தத்தைத் தொடைத்தாள். இரத்தம் வருதல் நிற்கவில்லை. அதனால் உள்ளம் வெதும்பிய அவள் நான் என்னுடைய உயிரை விட்டு விடுகிறேன் என்று முடிவு செய்தாள். பலவாறு கதறியழுதாள். சிவபெருமான் அந்த வேட மாதின் மெய்யன்பிற்கு உள்ளம் இரங்கினார். இரத்தம் வெளிவரச் செய்தலை நிறுத்தினார். அதனைக்கண்டு வேட மாது வருத்தம்

நீங்கினாள். ''சிவபெருமானே! என்னுடைய கணவன் அறியாமையினாற் செய்த குற்றத்தைப் பொறுத்து அவன் மூர்ச்சை தீர்ந்து எழுமாறு செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யின் நானும் என் கணவரும் தேவரீருடைய பணிகளைச் செய்து வாழ்வோம்'' என்று கூறி மேலும் சிவலிங்கப் பெருமானை வணங்கினாள். வீரன் உடனே மூர்ச்சை தெளிந்து எழுந்தான். வேடமாது உள்ளம் மகிழ்ந்தாள். தன் தலைவனைப் பார்த்து, ''வள்ளிக்கிழங்கு தோண்டத் தொடங்கிய நீ இங்கு எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானைக் காயப்படுத்தி விட்டாயே. அதனால் இவ்விடமெங்கும் இரத்தம் தோய்ந்திருத் தலைப் பார்'' என்று சொன்னாள். வேடர்கோனாகிய வீரனும் சிவ பெருமானைக் கண்டாள். அவன் இறைவனைப் பார்த்து, ''எம்பெருமானே தேவரீர் இவ்வெளியேனை ஆட்கொள்வ தற்கு ஈண்டு எழுந்தருளியுள்ளதை ஏழையேன் அறிந்திலேன்'' என்று கூறிப் பலவாறு இரங்கினான்.

## இறையவன் மறையவனாய் வெளிப்படல்

வீரன் அன்பும் அவன் மனையாள் அன்பும் இறைவனுக்கு மகிழ்ச்சியை அளித்தது. அவர் அந்தணக்கோலத்தோடு அவர் கட்கு முன்பு தோன்றினார். அவர் இருவரையும் பார்த்து ''நாம் உங்களை ஆளுதற்கு ஈண்டு எழுந்தருளினோம். திருமுடியிலே தழும்பேற்ற காரணத்தால் ''திருமுடித்தழும்பர்'' என்னும் பெயரையும் பெற்றோம். இந்த இரண்டு பெயர்களையும் காலைப் பொழுதிலே சொல்லுபவர்கள் பிறவித் துன்பம் நீங்கப் பெறுவதுடன் நல்லறிவையும் பெறுவார்கள். நாம் இறைவனு டைய திருமுடியிலே தழும்பை உண்டாக்கினோம். அதனால் தீவினையாளன் ஆனோம் என்று நீ உள்ளம் வருந்தாதே. பிரம்படித் தழும்பு, வில்லடித் தழும்பு, கல்லடித் தழும்பு, செருப்படித் தழும்பு முதலிய தழும்புகளைப் பெற்ற நமக்கு இஃதோர் பொருளல்ல. இவைகளெல்லாம் நம்முடைய திருவிளையாடல்கள் என்று அறிவாயாக! இவ்விடத்தில் எம்மையும் வடகீழ்ப்பக்கத்தில் உமையவளையும் நீயும் நின்மனைவியும் வழிபட்டு வருவீர்களாக. அவ்வாறு வழிபட்டு வருவீர்களாயின் இறுதியில் உங்களுக்கு நற்கதியினை வழங்குவோம்'' என்று கூறிச் சிவலிங்கத்துள் மறைந்தருளி னார். வேடனும் அவன் மனைவியும் சிவலிங்கப் பெருமானைப் பன்முறை பணிந்து வணங்கினார்கள். பிறகு வடகிழக்குத் திக்கை அடைந்து நோக்கினார்கள். அங்கு உமையவள் திருவுருவம்

வெளிப்பட்டு விளங்கியது. அதனைக்கண்டு இருவரும் மிகுந்த வியப்படைந்து போற்றினார்கள். பிறகு தமது இருப்பிடத்தை அடைந்தார்கள். அவர்கள் இருவரும் சிவலிங்கப்பெரு மானையும் உமையவளையும் நாள்தோறும் வழிபடுதலை உறுதியான செயலாகக் கடைப்பிடித் தொழுகினார்கள்.

## 4. சோழன் திருப்பணி

### கண்டன் என்னுஞ் சோழன்

காவிரிநீர் பாயப்பெறும் சோழவளநாடு மிகுந்த சிறப்புடையது. தேவாரம் பெற்ற சிவப்பதிகள் இந்நாட்டிலே நிறைந்திருக்கின்றன. இந்நாட்டின் சிறப்பினைச், ''சோழ வளநாடு சோறுடைத்து'' என்று ஆன்றோர்கள் வியந்து பாராட்டியிருப்பதாலும் அறியலாம் இந்நாட்டில் மன்னர் மகுடம் சூடும் ஐந்து நகரங்களுள் பூம்புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினம் சிறப்புற்றுச் சோழமன்னர்களுடைய ஆட்சிநகராக அந்நாளிலே விளங்கியது. கண்டன் என்னும் பெயரையுடைய சோழமன்னன் ஒருவன் காவிரிப்பூம் பட்டினத்தில் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். (அவன் அரசாட்சி செய்துகொண்டிருந்த காலம் பாண்டி நாட்டிலே வீரவனத்திலே வீரனுக்கு வீரசேகர சிவலிங்கப் பெருமான் வெளிப்பட்ட காலமாகும்) அந்தக் கண்ட சோழன் பேரழகு வாய்ந்தவன். பகைவர்கட்கு இடியேற்றைப் போன்றவன். ஞாயிற்றின் குலத்திலே தோன்றியவன்; அறுபத்து நான்கு கலைகளையும் அறிந்தவன்; உலகத்து உயிர்கட்குத் தாயைப் போன்றவன்; அவன் தன்னுடைய அரசாட்சியை இனிது செலுத்திக்கொண்டிருக்கும் நாளிலே அவனுடைய ஊழ்வினை யினால் வெண்குட்டம் ஒரு பொட்டு அளவு நெற்றியில் உண்டாகியது. பிறகு அது முகம் முற்றும் பரவியது. அதனால் கண்டன் உள்ளம் வருந்தினான். மருத்துவர்கள் பலர் மணி மந்திர ஔடதங்களால் அரசனுடைய நோயைப் போக்குதற்கு மிக முயன்றார்கள். அந்நோய் நீங்குதற்குப் பதிலாக உடல் முற்றும் படர்ந்து மூடியது. அதனால் அரசன் அளவற்ற தளர்ச்சியடைந்து மூர்ச்சையுற்றான் அமைச்சர்கள் அவனுடைய மூர்ச்சையை நீக்கினார்கள். ''இறைவன் எழுந்தருளிய சிவப்பதிகட்கெல்லாம் சென்று இறைவனை வழிபட்டால் இந்நோய் நீங்கும்; உள்ளம் வருந்துதல் வேண்டாம்'' என்று ஆறுதல் உரைகள் கூறினார்கள்.

## கண்டன் சிவப்பதிதோறும் சென்று இறைவனை வணங்கல்

அரசன் அமைச்சர்களின் அறிவுரையைக் கேட்டு அயர்வு தீர்ந்தான். ''அப்படியே சிவப்பதிதோறுஞ்சென்று இறைவனைப் போற்றுகின்றேன். அப்படியும் இந்நோய் தீராவிடின் உயிரை விட்டு விடுகின்றேன்'' என்றான். அரசனுடைய உரையைக் கேட்ட அமைச்சர்கள், ''இறைவனைப் போற்றினால் பிறவி நோயே தீர்ந்துவிடும்போது இந்த உடல்நோய் நீங்குவதுதானா அருமை? ஆதலின் உள்ளந் தளரவேண்டாம்'' என்றார்கள். அரசன் சிவப்பதிதோறுஞ் சென்று சிவபெருமானைப் போற்று தற்குப் புறப்பட்டான், வழிச்செலவுக்கு வேண்டிய பெரும் பொருளோடும் உறுதிச் சுற்றத்தினோடும் படைகளோடும் தன் ஊரைவிட்டுப் புறப்பட்டான்.

## சிவப்பதிகள்

முதலில் காசிக்குச் சென்றான். கங்கையிற்படிந்து உலக நாதனைப் போற்றினான். பிறகு, இந்திரநீலப் பருப்பதம், திருக்கேதாரம், திருப்பருப்பதம், அனேக தங்காவதம் முதலிய வட நாட்டுப்பதிகளைக் கண்டு வழிபட்டான். திரும்பித் தென்னாட்டை அடைந்தான். தொண்டை நாட்டில் காஞ்சிபுரம், திருவோண காந்தன்தளி, திருமேற்றளி, கச்சிநெறி காரைக்காடு, திருக்குரங்கணின்முட்டம், திருமாகறல், திருவோத்தூர், வன்பார்த்தான்பனங்காட்டூர், திருவிலம்பையங்கோட்டூர், திருவிற்கோலம், திருவாலங்காடு, திருப்பாசூர், திருவெண் பாக்கம், திருக்கள்ளிலி, திருக்காளத்தி, திருவொற்றியூர், திருவலி தாயம், திருவடமுல்லைவாயில், பழவேற்காடு, திருமயிலை, திருக்கச்சூர், திருவிடைச்சுரம், திருவான்மியூர், திருக்கழுக் குன்றம், அச்சிறுபாக்கம், திருவரசிலி, திருவக்கரை, திரு இரும்பைமாகாளம் ஆகிய பதிகளை அடைந்து வழிபட்டான். பின்னர் நடுநாட்டில் உள்ள திருவரத்துறை திருக்கூடலை யாற்றூர், திருத்தூங்கானைமாடம், திருச்சோபுரம், திருவெருக் கத்தம்புலியூர், திருவெண்ணெய் நல்லூர், திருநாவலூர், திருக்கோவலூர், திருஅறையணிநல்லூர், இடையாற்றூர், திருத்துறையூர், திருமாணிகுழி, திருவடுகூர், திருமுண்டீச்சுரம், திருப்பாதிரிப்புலியூர், திருவாமாத்தூர், திருப்புறவார் பனங் காட்டூர், திருவண்ணாமலை ஆகிய இடங்களுக்குச் சென்றான்.

பிறகு துளுவ நாட்டிற்குச் சென்று திருக்கோகன்னத்து இறைவனை வழிபட்டான். மலைநாட்டை அடைந்து திருவஞ்சைக்களத்தண்ணலை வணங்கினான். அதன்பின் கொங்குநாட்டில் அவிநாசி, திருமுருகன்பூண்டி, திருநணா, திருக்கருவூர், திருச்செங்குன்றூர், கொடுமுடி, திருவெஞ்சமாக் கூடல் ஆகிய பதிகட்குச் சென்று சிவபெருமானைப் போற்றினான். பிறகு தன்னுடைய நாடான சோழநாட்டை அடைந்து, கோயில் என்னும் திருத்தில்லை, திருவேட்களம், திருநெல்வாயில், திருக்கழிப்பாலை, தென்திருமுல்லைவாயில், திருநல்லூர்ப்பெருமணம், திருமயேந்திரப்பள்ளி, திருக் கலிக்காமூர், திருச்சாய்க்காடு, திருப்பல்லவனீச்சுரம், திருக் காட்டுப்பள்ளி, திருவெண்காடு, திருக்குருகாவூர், திருக் கோலக்கா, வைத்தீச்சுரன்கோயில், சீகாழி, திருக்கண்ணார் கோயில், திருநின்றியூர், திருப்புன்கூர், திருநீடூர், திருவன்னியூர், திருவேள்விக்குடி, திருச்சேரி, திருக்குறுக்கை, கருப்பறியலூர், திருக்குரக்குக்கா, திருவாளொளிபுற்றூர், திருமண்ணிப்படிக்கரை, திருவோமாம்புலியூர், திருக்கானாட்டுமுள்ளூர், திருநாரையூர், திருக்கடம்பூர், திருப்பந்தணை நல்லூர், திருக்கோடிக்கா, திருமங்கலக்குடி, திருக்கஞ்சனூர், திருப்பனந்தாள், திருச் சேய்ஞலூர், திருந்துதேவன்குடி, திருவியலூர், கொட்டையூர், திருப்புறம்பயம், திருவிசயமங்கை, திருவைகாவூர், திரு வின்னம்பர், வடகுரங்காடுதுறை, திருப்பழனம், திருவையாறு, திருநெய்த்தானம், பெரும்பலியூர், திருக்கானூர், திருப்பழூவூர், திருமழபாடி, அன்பிலாலந்துறை, திருமாந்துறை, திருப்பாற்றுறை, திருவானைக்கா, திருப்பைஞ்ஞிலி, திருப்பாச்சிலாச்சிரமம், திருவீங்கோய்மலை, வாட்போக்கி, திருக்கடம்பந்துறை திருப்பராய்த்துறை, திருக்கற்குடி, உறையூர், திரிசிராப்பள்ளி, திருநெடுங்களம், மேலைக்காட்டுப் பள்ளி, திருவாலம்பொழில், திருப்பூந்துருத்தி, திருவெறும்பியூர், திருக்கண்டியூர், திருச் சோற்றுத்துறை, திருவேதிகுடி, தென்குடித்திட்டை, திருப் புள்ளமங்கை, திருச்சக்கரப்பள்ளி, திருக்கருகாவூர், திருப் பாலைத்துறை திருநல்லூர், திருஆவூர், திருச்சத்தி முற்றம், திருப்பட்டீச்சுரம், திருவாறை, திருவலஞ்சுழி, திருக்குடந்தை, திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம், திருநாகேச்சுரம், திருவிடை மருதூர், குரங்காடுதுறை, திருநீலக்குடி, திருவைகன்மாடக் கோவில், திருக்கோழம்பம், திருவாவடுதுறை, திருதுருத்தி, திருவழுந்தூர், திருமாயூரம், திருப்பறியலூர், திருவிளநகர், திருநனிபள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திருத்தலைச்சங்காடு,

திருக்கடவூர், திருக்கடவூர்மயானம், திருவேட்டக்குடி, திருத் தெளிச்சேரி, திருத்தருமபுரம், திருநள்ளாறு, திருஅம்பர் மாகாளம், திருக்கோட்டாறு, திருமீயச்சூர், திருதிலதைப்பதி, திருப்பாம்புரம், திருவீழிமிழலை, பெருந்துறை, திருவன்னியூர், திருக்கருவிலி, திருநறையூர், திருசித்தீச்சுரம், திருஅரிசிற் கரைப்புத்தூர், திருச்சிவபுரம், திருக்கலயநல்லூர், திருக்கருக்குடி, திருவாஞ்சியம், திருநன்னிலத்துப்பெருங்கோயில், திருக் கொண்டீச்சுரம், திருப்பனையூர், திருவிற்குடி, புகலூர், வர்த்தமானீச்சுரம், இராமநதீச்சுரம், திருச்செங்காட்டங்குடி, திருப்பயற்றூர், திருமருகல், திருச்சாத்தமங்கை, திருநாகைக் காரோணம், திருச்சிக்கல், திருக்கீழ்வேளூர், திருத்தேவூர், திருப்பள்ளிமுக்கூடல், திருவாரூர், திருவாரூர்அரநெறி, திரு மூலட்டானம், திருபரவையுண்மண்டளி, திருவிளமர், திருக்கர வீரம், திருப்பெருவேளூர், திருத்தலையாலங்காடு, திருக்குட வாயில், திருச்சேறை, திருநாலூர்மயானம், திருகடுவாய்க்கரைப் புத்தூர், திருவிரும்பூளை, திருவரதை, திருஅவளிவணல்லூர், திருப்பரிதிநியமம், திருவெண்ணி, திருப்பூவனூர், திருப் பாதாளீச்சுரம், திருக்களர், திருச்சிற்றேமம், திருவுசாத்தானம், திருஇடும்பாவனம், திருகடிக்குளம், திருத் தண்டலைநீணெறி, திருக்கோட்டூர், திருதேங்கூர், திரு வெண்டுறை, கொள்ளிக்காடு, திருக்கொள்ளம்பூதூர், திருக்காறாயில், திருக்கன்றாப்பூர், திருநாட்டியத்தான்குடி, திருநெல்லிக்கா, திருவலிவலம், திருவாய்மூர், திருக்கோளிலி, திருமறைக்காடு, திருஅகத்தியான் பள்ளி, திருக்கோடிக்கா ஆகிய சிவப்பதிகள் யாவற்றையுங் கண்டு வழிபட்டு, கண்ட சோழன் தன்னூராகிய காவிரிப்பூம் பட்டினத்தை அடைந்தான். ஆயினும் அவனுடைய குட்ட நோய் ஒரு சிறிதும் குறையவில்லை.

## பாண்டியநாட்டிற்குப் புறப்படல்

அரசன் அமைச்சர்களையும் அந்தணர்களையும் அழைத் தான். ''நல்வினை மிக்க சிவப்பதிகள் பலவற்றைத் தொழுது வழிபட்டும் நோய் சிறிதும் குறையவில்லையே. இனிமேல் யாது செய்யலாம்'' என்று உசாவி உள்ளம் வருந்தினான். அவர்கள் அரசனைப் பார்த்துப், ''பாண்டி நாட்டில் உள்ள சிவப் பதிகளையுங்கண்டு வழிபட்டபின் பகர்வாயாக'' என்றார்கள். அரசன் மீண்டும் முன்போல் சிவப்பதி வழிபாட்டைத் தொடங் கினான்.

திருவாலவாய், திருவாப்பனூர், திருப்பரங்குன்றம், பிரான் மலை, திருவாடானை, திருக்கானப்பேர், திருவேடகம், திருப் பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி, திருப்புனவாயில், திருப்புத்தூர் ஆகிய சிவப்பதிகளை அடைந்து சிவபெருமானைப் போற்றினான். திரு இராமேசுரத்திற்குச் செல்வதென்று முடிவு செய்தான். கிழக்குத் திக்குநோக்கிப் புறப்பட்டான்.

### வீரவனம் அடைதல்

வீரவனத்திற்கு மேற்குப்பக்கமாக வந்து சேர்ந்தபோது கதிரவன் மறைய, அரசன் தன் படைகளோடு அங்குத் தங்கினான் (பாடி வீடு) கூடாரம் அமைத்துக் காட்டில் உள்ள கனிகளைத் தின்று கவலை தீர்ந்திருந்தான்.

### வீரன் கனவு காண்டல்

கண்டன் சிவப்பதிதோறுஞ் சென்று இறைவழிபாடு செய்து கொண்டிருந்த அந்நாளில், வேடனாகிய வீரன் தன் மனைவி யோடு வீரசேகரப்பெருமானைப் போற்றி வழிபாடு செய்து கொண்டிருந்தான். ஒரு நாள் வீரனுக்கு அன்பு மேலிட்டது. என்னை ஆளாகக்கொண்ட சிவபிரான் திருக்கோயில் இல்லால் இவ்வாறு பெருங்காட்டில் உமையவளோடு எழுந்தருளி யிருப்பது நனறாகுமோ? பிற சிவப்பதிகளைப்போல் இப் பெருமானுக்கு கோயிலும் பூசையும் அமையவேண்டியது இன்றியமையாததாகும். வறியவனாகிய யான் இதன் பொருட்டு யாது செய்வேன்? எவரிடத்திலே சென்று இக்குறையை நீக்க வேண்டுவேன்? இலை சருகு முதலியன உதிராதபடி மூடியிருந்த புற்றையும் இழுஞனாகியயான் இடித்துத் தொலைத்துத் திருமுடியிலே தழும்பு ஒன்றையும் உண்டாக்கி னேன். என்னுடைய மனக்கவலை தீருமாறு எம்பெருமான் எந்நாள் திருவருள் புரிவான்? என்று கூறி வருந்தினான். இக்கவலையினால் உள்ளஞ்சோர்நது கிடந்தான். இறைவன் திருவருளால் அவனுக்குச் சிறிது உறக்கம் வந்தது. அப்போது வீரசேகரப்பெருமான், முன்தோன்றிய மறையவர் கோலத் தோடு வீரன் கனவில் தோன்றி வீரனைப் பார்த்து, ''அன்பனே! கவலைப்படாதே. நமக்குக் கோயிலும் பூசையும் உண்டாகும் அவைகளை நீயும் காண்பாய்; மறறவர்களுங்காண்பார்கள்.

சோழநாட்டுக் காவிரிப்பூம்பட்டினத்து மன்னன் கண்டன் என்னும் பெயரை உடையவன். நம் இடத்திலே பேரன்புள்ள வன். பழவினைப்பயனால் அவனுக்கு வெண்குட்ட நோய் உண்டாகியது. அவன் அதன்பொருட்டு வருந்தி நம்முடைய பதிகளுக்கெல்லாஞ்சென்று நம்மைப் போற்றி வழிபட்டுக் கொண்டு வருகிறான். இப்போது இராமேசுரத்திற்குச் செல்லும் எண்ணத்தோடு இங்கு வந்து, இந்த வீரவனத்திற்கு மேற்குப் பக்கத்திலே தங்கியிருக்கிறான். உனக்குத் திருவருள் செய்தது போல் அவனுக்குந்திருவருள்புரிய எண்ணங்கொண்டுள்ளோம். அவன் நம்மை வந்து பார்க்குமாறு நீ சென்று அவனிடம் கூறுவாயாக'' என்று இயம்பி மறைந்து அருளினார்.

## வேடர்கோன் வேந்தனைக் காண்டல்

கனவுகண்ட வீரன் திடுக்கிட்டெழுந்தான். சிவபெருமான் திருவருளை எண்ணி வியந்தான். மிகுந்த மகிழ்ச்சியோடு சோழ மன்னனைக் காணப்புறப்பட்டான். கடவுள் கனவிற் கழறியவாறே கண்டன் வீரவனத்தின்மேல்பால் தங்கியிருத் தலைக்கண்ட கணக்கிலா உவகைகொண்டான். அரசன் அமர்ந்திருக்கும் (கூடாரம்) பாடி வீட்டை அடைந்து, வாயில் காவலரைப் பார்த்து. ''மன்னனைக் காண்டற்கு நான் வந்துள்ளேன் என்று நீங்கள் அரசனிடம் சென்று கூறுங்கள்'' என்று சொல்லியனுப்பினான். வாயில்காவலர் அரசனிடம் சென்று, ''தங்களைக் காண்டற்கு வேடன் ஒருவன் வந்துள்ளான்'' என்று விளம்பினர். ''அவனை அழைத்து வாருங்கள்'' என்று அரசன் கட்டளையிட்டான். காவலர் வீரனைக் காவலனிடம் அழைத்துச் சென்றனர். வீரன் வேந்தனை வணங்கி ஒருபுறத்திலே ஒடுங்கி நின்றான்.

வேந்தன் வேடனைப் பார்த்து, ''நீ யார்? இங்கு வந்த காரணம் யாது இயம்புவாயாக!'' என்றான். வீரன் மீண்டும் வேந்தனைப் பணிந்து, ''ஐயனே! நான் இந்தக் காட்டில்வாழும் ஒரு வேடன். நின்னைக்கண்டு அடிபணியும்பொருட்டு வந்தேன். இந்தக் காட்டின் கிழக்குப்பக்கத்தில் ஒரு பெரும் வீரைமரத்தின் அடியில் புற்று ஒன்று இருந்தது. அப்புற்றில் இருந்த வள்ளிக்கிழங்கை எடுக்கும்பொருட்டு அதனை இடித்தேன். அப்பொழுது அங்கு ஒரு சிவலிங்கத்தைக் கண்டேன். அதன் முடி என் கருவியால் தாக்குண்டு உதிரத்தைப் பெருக்கிப் பிறகு

மாறியது. அந்தச் சிவலிங்கத்தின் தோற்றத்தை நினக்குத் தெரியப்படுத்தற்கு எண்ணியே அடியேன் இவ்விடத்திற்கு வந்தேன்'' என்று கூறி மீண்டும் பணிந்தான்.

## நோய் நீங்கல்

வீரசேகரப்பெருமானுடைய தோற்றத்தைக் கேட்ட அளவில் காதின் குட்டநோய் நீங்கியது. அந்தப்புதுமையை அவ்விடத்தில் இருந்தவர்கள் எல்லோரும் கண்டார்கள். அந்தணர் அமைச்சர் முதலியோர் மகிழ்ச்சியடைந்தார்கள். வீரனுங் களிப்படைந்து நின்றான். சிலர் கண்ணாடியைக் கொண்டுவந்து அரசனிடம் காட்டினார்கள். காதின் குட்டம் நீங்கியதைக் கண்ட கண்டன் சிவலிங்கப்பெருமானைக் காண விழைந்தான். ''அந்த இலிங்கம் எங்கே இருக்கிறது அதனை எனக்குக் காட்டுவாயாக'' என்று கூறி எழுந்தான். அவ்வளவில் காலின் குட்டமும் நீங்கியது. அதனைக்கண்ட அரசன் இறைவன் திருவருளை எண்ணிக் கைகுவித்து வணங்கினான். அப்பொழுதே கையின் குட்டமும் அகன்றது. வேடன் வழிகாட்ட வீர மரத்தடியை அடைந்து வீரசேகரப்பெருமானைத் தழுவிக்கொண்டான். அரசனுடைய குட்டநோய் முழுதும் நீங்கியது. அவனுடைய உடல் முன்னையினும் பேரழகுடையதாய்ச் சாணை தீட்டப்பெற்ற மணியைப்போல் விளங்கியது. அரசன் வியப்புங்களிப்பும் அடைந்தான். வீரசேகரப்பெருமானைப் பலகால் விழுந்து பணிந்து எழுந்தான். பலவகைப் புகழ்பாடல்களைப் பாடினான். பன்முறை இன்பக்கூத்தாடினான். பன்முறை அந்தக் கடவுளின் அருளைக் கொண்டாடினான். பன்முறை தழுவிக் கொண்டான்.

அரசனுக்கு நோய் நீங்கியதால் மகிழ்ச்சிமிக்கது. அவன் களிப்பின் மிகுதியால் அந்தணர்களைத் தழுவிக் கொண்டான் அமைச்சர்களைத் தழுவிக்கொண்டான்; உறவினர்களைத் தழுவிக்கொண்டான்; களிப்புடன் நின்ற வேடனைத் தழுவிக் கொண்டான். ''இறைவனுடைய திருவருள் இருந்தவாறென்னே? சிவப்பதிகளையெல்லாம் வழிபடச்செய்த பெரியோர்களின் இயல்பைப் புகழ்வேனோ? சிவலிங்கப்பெருமானின் இருப்பைக் கூறி எனக்கு நன்மையை உண்டாக்கிய இந்த வேடனைப் புகழ்வேனோ? என் உடலின் வெளுப்போடு கூற்றுவனின்

சிவப்பையும் (சினத்தையும்) நான் போக்கினேன் என்னுடைய ஆணவமலக் கறுப்பும் தீர்ந்தது'' என்று பலவாறு கூறி மகிழ்ச்சி யடைந்தான். பின்னர் ஒருவாறு தான் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றான்.

## சோழன் திருப்பணி

இருப்பிடத்தை அடைந்த அரசன் அமைச்சர் முதலானவர் களுடைய முகத்தைப் பார்த்து, ''காசிமுதலிய சிவப்பதிகட்குச் சென்றும் நீங்காத குட்டநோய் இந்த இடத்திற்கு வந்ததும் நீங்கிவிட்டது. இன்பம் உண்டாகியது. பொருந்திய சிவப்பதிகள் பலவற்றுள்ளும் இப்பதி சிறந்தது என்பதை உணர்ந்தேன். இதனை எனக்குத் தெரியப்படுத்திய இவ்வேடனுக்கு நான் செய்யக்கூடிய கைம்மாறு ஒன்றுமில்லை. என்னை ஆட்கொண் டருளிய சிவபெருமான் திருக்கோயில் இல்லாமல் காட்டிலே எழுந்தருளியிருக்கிறார். தொழிலாளர்கள் பலரை அழையுங்கள். அவர்கட்குப் பொருளைக் கொடுத்துக் காட்டை அழித்துத் திருத்துங்கள். அழகிய கோயிலைச் சிறப்பாகக் கட்டுங்கள். எவ்வளவு பொருள் செலவானாலும் கவலைப்படாதீர்கள்'' என்று கட்டளையிட்டான். அரசனுடைய கட்டளையைக் கேட்ட அமைச்சர்கள் ''அவ்வாறே செய்கிறோம்'' என்றார்கள். வேடனாகிய வீரனும் அரசனிடம் விடைபெற்றுக் கொண்டு தன்னுடைய இருப்பிடத்திற்குச் சென்றான்.

அமைச்சர்கள் தொழிலாளர்கள் பலரை அழைத்துக் காட்டை அழித்து ஒழுங்குபடுத்தினார்கள். வீரசேகரப்பெருமான் எழுந்தருளியிருந்த வீரை மரம் ஒன்றுமட்டும் எஞ்சி நின்றது. அக்காட்டில் இருந்த விலங்கு முதலிய உயிர்த்தொகைகள் வேறுகாட்டை அடைந்தன. காடு களையப்பெற்ற பின் அமைச்சர்கள் சிற்ப நூல் வல்லார் பலரை அழைத்துத் திருக் கோயிலை அமைக்கும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே சிற்ப நூல் வல்லார், கருப்பக்கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், நிருத்த மண்டபம், வசந்த மண்டபம், ஊர்தி மண்டபம், திருவிழா மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், திருமதில், திருக்கோபுரம், திருமடைப்பள்ளி, வேள்விச்சாலை முதலிய எல்லாவற்றையும் அழகுறச் செய்து முடித்தார்கள்.

## சோழ தீர்த்தம்

திருக்கோயில் திருப்பணி முடிவுபெற்ற செய்தியை அமைச்சர்கள் அரசனுக்கு அறிவித்தார்கள். அரசன் திருக கோயில் முதலியவைகளைப் போய்ப் பார்த்து மகிழ்ச்சி யடைந்தான். மூழ்குதற்கு நன்னீர்ப்பொய்கை இல்லையே என்று உள்ளம் வருந்தினான. சிவபிரான் முன்னர்ப் பணிந்து முறையிட்டான். விண்ணொலி ஒன்று ''நமக்கு முன்பு சிவகங்கை என்னும் பெயருடைய நன்னீர்ப் பொய்கை ஒன்றை உண்டாக்கி அதன் எல்லையை அறிதற்கு மணமலர்களையும் சிதறியுள்ளோம். அதன் எல்லைப்படி அதனைத் தோண்டி நினது பெயரை அத்தீர்த்தத்திற்கு இடுவாயாக'' என்று முழங்கியது. அரசன் சென்று மலர்கள் சிதறிக்கிடக்கும் எல்லையைப் பார்த்தான். அந்த அளவிற்கு அதனை வெட்டிப் படி முதலியவைகளைக் கட்டி, அதற்குச் சோழ தீர்த்தம் என்று பெயரிட்டான்.

## குடமுழுக்கு

கோயிலைச் சுற்றித் தெருக்களை அமைக்கச் செய்தான். நால்வகைக் குலத்தோரும் தங்கி வாழ்தற்கு மாடமாளிகை களையும் உண்டாக்கச் செய்தான். உணவுச்சாலை முதலியவை களை ஏற்படுத்தினான், கூத்தபிரான், சிவபிரான் உமையவள் முதலிய மூர்த்திகளுடைய திருவிழா வடிவத்தைச் செய்தான். குடை, கொடி, கவரி கோவிலுக்கு வேண்டிய பாத்திரங்கள் பூசைப்பொருள்கள் முதலிய எல்லாவற்றையும் செய்தமைத் தான். நால்வகை வகுப்பார்களையும் குடியேற்றினான். நன்னாள் ஒன்றிலே பல்லியங்கள் முழங்கக் குடமுழுக்குச் செய்தான். பூசனை செய்யும் ஆதிசைவர்கள், கோயிற் பணிபுரியும் திருத்தொண்டர்கள் ஆகிய எல்லோருக்கும் பொன்னாடை முதலியவைகளை வழங்கினான். நாள்வழிபாடாகிய பூசை, சிறப்பு வழிபாடாகிய திருவிழா முதலியவைகளையும் நடத்தி மேலும் நடத்தற்கு ஏற்பாடு செய்தான். வீரவனத்தின் பெருமையும் சோழன் திருப்பணியும் உலகெலாம் பரவியது. சோழனும் வேடனாகிய வீரனும் மிக மகிழ்ச்சியடைந்தார்கள்.

# 5. சோழன் மகப்பேறும் வீடுபேறும்

## கண்டன் கடவுளைப் போற்றுதல்

சோழ மன்னன் ஒருநாள் வீரசேகரப்பெருமானுக்குப் பூசனை முதலியவைகளை மிகுந்த சிறப்புடன் செய்தான். ''அன்பு என்னும் தாய் அருள் என்னும் குழவியைப் பெறும் என்பார்கள். நீ நின்னுடைய திருவருளினாலே எனக்குப் பேரருள் புரிந்தாய். உலகோர் தாயற்ற சேய் என்று என்னை இகழாவண்ணம் அன்பையும் எனக்குக் கொடுத்தருள்வாயாக! என் உடலில் தோன்றிய வெண்மையைப் போக்கினாய். பிறவிப் பிணியைக் கொடுக்கும் வெண்மையையும் (அறிவின்மையையும்) போக்கியருளுதல் வேண்டும்.'' என்று கூறி வீரசேகரப் பெருமானைப் புகழ்ந்து பாடலானான்.

### வீரசேகரர் வணக்கம்

ஒருமல வலியான் என்றும்,
இருவினை உடையான் என்றும்,
வெருவுமும் மலத்தான் என்றும்
விளம்பினர் விளம்பி நிற்க
அருள்கனிந் தென்னை ஆண்டாய்:
ஆண்டதற் கியையு மாறுன்
பொருவிலா ஞானம் *ஏய்த்தி
பூரணா நந்த வாழ்வே. (1)

வெருவுற மடங்கும் ஓரேழ்
விடையுடை விடையாய் போற்றி
கருநிறக் கடல்சு வற்றும்
கணையுடைக் கணையாய் போற்றி
பெருகெழில் சுமந்த ஆக்கப்
பெண்ணுடைப் பெண்ணாய் போற்றி
முருகலர் மேனிக் கொப்பு
முகிலுடை முகிலாய் போற்றி. (2)

கமலையொண் மாமை நோக்கும்
கண்ணுடை அடியாய் போற்றி
அமருமக் கண்சூழ் என்பு
கைவிரல் அணிந்தாய் போற்றி

* ஏய்த்தி – பொருந்தச் செய்வாய்.

பமரமுண் டுழக்கும் பச்சைத்
துளவொரு பாலாய் போற்றி
தமரவே தங்கள் நாறும்
[1]பரிகலம் தரித்தாய் போற்றி (3)

திரிபுரம் எரித்தாய் போற்றி
தீமழுத் தரித்தாய் போற்றி
கரியற உரித்தாய் போற்றி
கலைபல விரித்தாய் போற்றி
அரியுடல் பரித்தாய் போற்றி
அடியர்மா சிரித்தாய் போற்றி
விரியறந் தெரித்தாய் போற்றி
[2]வீரைஅங் குரித்தாய் போற்றி. (4)

ஒளிகெழு பிழம்பே போற்றி
உமையவள் மணாள போற்றி
அளிகொளெண் குணத்தாய் போற்றி
அமைந்தவெட் டுருவாய் போற்றி
முளிதவிர் வீரை மூலம்
முளைத்தெழு சுடரே போற்றி
தெளிபவர்க் கினிக்கும் வீர
சேகரப் பிரானே போற்றி. (5)

*இவ்வாறு வீரசேகரப்பெருமானைப் போற்றி வணங்கிய சோழன் பிறகு உமையவள் முன்பு சென்று அந்தப் பிராட்டியையும் புகழ்ந்து வணங்கலானான்.*

**உமையவள் வணக்கம்**

உருகுமெய் அடியர் உள்ளத்
தொளிவளர் விளக்கே போற்றி
கருகுவன் மலநோய் தீரக்
கடைக்கணித் தருள்வாய் போற்றி
பெருகுபல் லறமும் நாளும்
பெயர்வற அமர்ந்து வாழும்
[3]குருகுமுன் கையாய் போற்றி
குலமலை மருந்தே போற்றி. (1)

---

*1. பரிகலம் – பிரமகபாலம், நான்முகன் மண்டையோடு.*
*2. வீரை மரத்தடியில் தோன்றினாய்.*
*3. குருகு – வளையல்.*

எண்ணிய அன்பு செய்வார்
என்றுமெய்ப் புறாமல் ஓம்பும்
புண்ணிய முதலே போற்றி
பூரணா நந்த ரூபம்
நண்ணிய தாயே போற்றி
நல்லவர் நயந்து நாளும்
அண்ணிய வீரை மேவும்
அருட்பெருங் கடலே போற்றி. (2)

நகுபரை யாதி யிச்சை
ஞானம்வண் கிரியை ஆகி
மிகுதொழில் ஐந்தும் எங்கள்
வீரசே கரனார் செய்யத்
தகுதுணை ஆகி நிற்கும்
தண்ணிய அமுதே தஞ்சம்
புகுமவர் எய்ப்பில் வைப்பே
புண்ணிய வாழ்வே போற்றி. (3)

அறைதரும் இலயம் போகம்
அதிகாரம் மூன்றும் ஆகி
**நிறைதரும் இனும்பல்** வேறாய்
**நிகழ்தரு** திருவே போற்றி
மறைதரு முதலே போற்றி
மறையினுட் பொருளே போற்றி
உறைதகு மறையின் அந்தம்
உணர்தரா உமையே போற்றி. (4)

மருவளர் அளகம் போற்றி
வளர்ஒளி வதனம் போற்றி
உருவளர் அருட்கண் போற்றி
உவமையில் செவ்வாய் போற்றி
கருவளர் பவந்தீர் ஞானங்
கசிந்தெழு கொங்கை போற்றி
திருவளர் உமையே நின்பொற்
சேவடிக் கமலம் போற்றி. (5)

இவ்வாறு வணங்கிய சோழன் மேல்பாற்காட்டில் அமைந்த தன்னுடைய இருப்பிடத்திற்குச் சென்றான். தான் தங்கியிருந்த இடத்துக் காடுகளையெல்லாம் அழித்துச் சோழ மன்னன், அந்த இடத்திலே தன்பெயரால் ஓர் ஊர் உண்டாக்கி; அவ்விடத்தி

லேயே தங்கியிருந்து கொண்டு நாள்தோறும் வீரசேகரப் பெருமானையும் உமையாம்பிகையையுஞ் சென்று வணங்கி வந்தான்.

### மகப்பேறு

கண்ட சோழனுடைய மனைவியின் பெயர் சுசீலை; பேரழகு வாய்ந்தவள். அவள் உமையாம்பிகையினிடத்திலே பேரன்பு கொண்டாள். வெள்ளிக்கிழமைதோறும் சிவகங்கையில் மூழ்கி மாவிளக்கு வைத்து இறைவியை வழிபட்டதுடன்; வடை, பாயசம், பால்சோறு முதலியவைகளைச் செய்து பூசை செய்யவும் ஏற்படுத்தினாள். சுசீலையின் விருப்பம் நன்மகப் பேற்றை அடையவேண்டும் என்பதுதான். உமையாம்பிகை சுசீலையின்பால் கடைக்கண் பார்வையைச் செலுத்தினாள். இறைவியின் திருவருள் நோக்கிற்குப் பின் அருமையான பொருளும் உண்டோ? நன்னாள் ஒன்றிலே சுசீலை ஆண் மகனைப் பெற்றாள்.

### வீரசேகரச் சோழன்

தனக்கு ஆண்மகன் தோன்றியதைக் கண்டு கண்ட சோழன் பெருங்களிப்படைந்தான். மறையவர் முதலியோர்க்கு மணி பொன் முதலியவைகளை வழங்கினான். தேர்ந்த கணிதர்களைக் கொண்டு பிறந்தநாட் குறிப்பு முதலியவைகளை எழுதச் செய்தான். அம்மகனுக்கு வீரசேகரச் சோழன் என்று பெயரிட்டான்.

## இராமேசுரஞ் சென்று மீளல்

சோழமன்னன் காவிரிப்பூம்பட்டினத்திற்குச் செல்லுதலை அடியோடு மறந்திருத்தலைக் கண்ட அமைச்சர்கள் ஊருக்குத் திரும்பவேண்டும் என்று நினைவுண்டாக்கினார்கள். நாட்டை விட்டுப் புறப்பட்டு நெடுங்காலமானதை அறிந்த அரசன் புகாருக்குத் திரும்ப எண்ணினான். வீரவனப்பெருமானை விட்டுச் செல்ல அவன் உள்ளம் இடங்கொடுக்கவில்லை. இறையவன் முன்சென்று, ''கறைமிடற்றண்ணலே! உன்னை யான் எவ்வாறு மறந்திருப்பேன்?'' என்று கூறி இரங்கினான். இறையவன் விண்ணொலியாக, ''அரசனே! நீ இப்பொழுது நின் ஊர்க்குச்செல். ஆண்டிற்கொருமுறை சித்திரைத் திங்களிலே இங்கு வந்து வணங்கிச்செல் பலன் கிடைக்கும்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். அரசன் தன் மனைவியோடு வீரசேகரரிடமும்

உமையாம்பிகை இடமும் பிரியா விடைபெற்றுப் புறப் பட்டான். பிரிவதற்கு வருந்திய வேடன் வீரனுக்கும் தகுந்த நன்மொழிகள் கூறிப் படையுடன் புறப்பட்டான். இராமேசுரஞ் சென்று வழிபாடாற்றிக் கொண்டு மீண்டான். சோழன் வருகையை உணர்ந்த பாண்டியன், சோழனை வரவேற்று விருந்து நடத்தினான். சோழன் வீரவனத்தின்கண் நிகழ்ந்த செய்திகளையெல்லாம் பாண்டியனுக்குப் பகர்ந்தான். பிறகு தன் உறுதிச் சுற்றத்தோடு புகாரையடைந்தான். இறைவன் கட்டளைப்படி ஆண்டுக்கொரு முறை வீரவனத்தை அடைந்து இறைவழிபாடு செய்து கொண்டிருந்து இறுதியில் சிவலோகம் அடைந்தான். வீரனும் தன் மனைவியோடு நெடுநாள் வீரவனே சரை வழிபட்டுக் கொண்டிருந்து, இறுதியில் வீடுபேற்றை அடைந்தான்.

## 6. வீரை பலாவாகியது

### சுகுணபாண்டியன்

அந்நாளில் சுகுணபாண்டியன் என்பவன் மதுரையில் அரசு புரிந்துகொண்டிருந்தான். கண்டசோழனால் வீரவனத்தின் பெருமையை உணர்ந்த அவன் வீரவனப்பெருமானைப் போற்றி வழிபடுதற்கு எண்ணினான். உறுதிச் சுற்றத்தினரோடு புறப்பட்டுக் காடுகளைக் கடந்து வீரவனத்திற்கு வந்து சேர்ந்தான். சோழ மன்னனுடைய திருப்பணிகளைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தான். சிவகங்கையில் மூழ்கினான். திருநீறு கண்மணி மாலை முதலியவைகளை அணிந்தான். ஐந்தெழுத்து மறையை ஓதினான். கோபுர வாயிலிலே பணிந்து எழுந்து கோயிலுக்குள் வலம் வரத் தொடங்கினான் பாண்டியன் உள்ளத்தில் ஓர எண்ணந் தோன்றியது. ''இக்கோயிலில் எழுந்தருளிய சிவலிங்கம் மிகப்பெருமை பொருந்தியது என்று சோழன் சொன்னது பொய்யோ மெய்யோ தெரியவில்லை. வியத்தகு நிகழ்ச்சி ஒன்றைக் கண்டால் சோழன் சொன்னது உண்மைதான் என்று துணியலாம்'' என்று தனக்குள்ளே எண்ணிக்கொண்டு சென்றான். வடக்குப் பக்கத்தை அடைந்தவுடன் வானளாவி நின்ற வீரை மரத்தைக் கண்டான். அம்மரத்தின் பெயர் யாது என்று பக்கத்திருந்த முதியவர்களை உசாவினான். அம்மரத்தின் பெயர் ''வீரை'' என்று அவர்கள் மறுமொழி கூறினார்கள். அதைக்கேட்ட பாண்டியன், அம்மரத்தைப் பலா மரமாகுமாறு வீரசேகரப்பெருமான்-

செய்யவேண்டும். அவ்வாறு செய்துவிட்டால் அப்பெருமான் உண்மையாகப் பெரும் பெருமை பொருந்தியவர்தான் என்று உள்ளத்திலே எண்ணிக்கொண்டு சென்றான்.

## வியத்தகு நிகழ்ச்சி

அவ்வளவில் அவ்வீரைமரம் பலாமரமாக மாறியது. பாண்டியன் இரண்டாம்முறை வலஞ்செய்யத் தொடங்கி மேற்குப் பக்கமாகச் சென்றவுடன் பலாப் பழத்தின் நறுமணம் மூக்கைத் துளைத்தது. பாண்டியன் முதலிய எல்லோரும் அதனை அறிந்தார்கள். அது பலாப் பழத்தின் மணந்தான் என்று துணிந்த பாண்டியன் வடக்குப் பக்கத்தை அடைந்தான். அங்கு முன்பு கண்ட வீர மரத்தைக் காணவில்லை. அம்மரம் நின்ற இடத்திலே பலா மரம் விளங்குதலைப் பார்த்தான். அம்மரம் வானளாவி நின்றது. அடிமுதல் முடிவரை கனிகள் நிறைந்து இருந்தன. கோயிலின்மேல் பலாக்கனியின் சாறு ஒழுகிக் கொண்டிருந்தது. மேலும் அச்சாறு கல் தரைகளிலும் ஒழுகிப் பிசுபிசுப்பைச் செய்தது. கனியின் பக்கங்களிலே ஈக்கள் மிகுதியாக மொய்த்துக் கொண்டிருந்தன. இந்த வியத்தகு நிகழ்ச்சியைப் பலருங் கண்டார்கள். பலா மரத்தினைப் பார்த்து இறும்பூதடைந்தார்கள், சுற்றுப்பக்கத்து ஊரினரும் அப் புதுமையைப் பார்ப்பதற்கு அங்கு வந்து கூடினார்கள். இஃது எங்குங் கண்டறியாத புதுமையாக இருக்கிறதென்று பேசிக் கொண்டார்கள் சிலர் பலாச்சுளைகளை உண்ணுதற்கு விரும்பிக் கையிலெடுத்தார்கள். உண்டால் யாது நேருமோ என்று அஞ்சித் தரையிலே போட்டுவிட்டார்கள். சிலர் இது வீரசேகரருடைய திருவிளையாடல் என்று செப்பினார்கள். சிலர் இஃது உமையாம்பிகையின் திருவிளையாடல் என்று உரைத்தார்கள் சிலர், இஃது இருவருஞ் சேர்ந்து செய்த திருவிளையாடல் என்றார்கள். சிலர் இதற்கு ஒப்பான சிவப்பதி வேறு இல்லை என்றார்கள். பலரும் இப்படிப் பலவாறு பகர்ந்து கொண்டிருக்கப் பாண்டிய மன்னன் நாம் உள்ளத்தில் எண்ணியதற்காகவே இறைவன் இவ்வாறு செய்துள்ளான் என்று உறுதியாக அறிந்தான். ''அந்தோ நாம் அறிவின்மையின் இவ்வாறு உள்ளத்தில் எண்ணினோம். வேறொரு தீமை நேர்ந் திருப்பின் அதனை யாரே தடுப்பார் என்ற நினைந்தான். தான் எண்ணியதை எல்லோரும் அறியுமாறு தெரியப்படுத்தினான். பின்னர் வீரசேகரப்பெருமான் முன்னர்ச் சென்றான் அழுதான்;

தொழுதான்; நிலத்திலே விழுந்தான். மூவுலகும் போற்றும் முதல்வனே! நின் பெருமையை நான் அறியேன். திருமால் முதலியோர்களும் நின்பெருமையை அறியார்கள் எனின் இச்சிறியேன் எவ்வாறு அறிவேன்? என்செயல் எனக்கே நகைப்பை விளைக்கின்றது. ஓர் அரசன் ஒரு வேடன் கூறியதைக் கேட்டுத் திருப்பணி முதலியவைகளைச் செய்தான். இவனோ அறிவில்லாமல் சிவபெருமானுடைய பெருமையை ஆராய்ந்து பார்த்தான். இவனுடைய குலத்தினரும் இச்செய்கையையே நெறியாகக்கொண்டுள்ளார்கள் போலும் என்று உலகத்தார்கள் நினைக்க நான் பெரிய தவற்றினைச் செய்தேன். இறைவனே! என்னுடைய குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும் என்று பலவாறு இரங்கி வருந்தினான்.

## இறைவன் திருவருள்

வீரசேகரப்பெருமான் சுகுணபாண்டியனுக்குத் திருவருள் புரியத்திருவுளங்கொண்டருளினார். ''பாண்டியனே! கேட்பாயாக. நீ நம் பெருமையை ஆராய்ச்சி செய்து பார்த்தது நல்லதுதான். உலகத்தார் பலரும் நம் பெருமையை நன்கு அறிந்து கொள்ளு மாறு நீ செய்தாய். உனக்கு வேண்டுவது யாது? அதனைத் தெரிவிப்பாயாக! இந்தப் பலாக் கனியை எல்லோரும் அன்புடன் உண்க நீயும் உண்பாயாக! உண்பவர்கட்குள்ள நோய்க ளெல்லாம் நீங்கும் இறுதியில் இப்பலா முன்போல் வீரை மரமாகவே விளங்கும்'' என்று உருவற்ற விண்ணொலியாக விளம்பினார். பாண்டியன், ''நான் உய்ந்தேன் உய்ந்தேன்'' என்று உரைத்து ஒரு கனியை எடுத்து உண்டான். எல்லோரையும் எடுத்து உண்ணுமாறு பணித்தான். அரசனுக்குத் தீராமல் இருந்த வயிற்று நோய் தீர்ந்தது. உண்டவர்கள் யாவருக்கும் இருந்த நோய்கள் நீங்கின. பலரும் பாண்டியனைப் புகழ்ந்தார்கள். பலா மரம் பழமைபோல் வீரை மரமாக விளங்கி நின்றது. வானவர்கள் மலர்மாரி பெய்தார்கள் பாண்டியன் வீரசேகரர் கோயிலுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்தான். தானும் பல திருப்பணிகளைச் செய்தான். வீரசேகரப்பெருமானையும் உமையாம்பிகையும் வணங்கித் திருவாலவாயை அடைந்தான். அங்குள்ளவர்கட்கு வீரவனத்தின் பெருமையைக் கூறினான். மிகுந்த சிறப்புடன் வாழ்ந்து கொண்டிருந்தான்.

## 7. குபேரன் வழிபாடு

### குபேரன் தவம்

குபேரன் என்பவன் நான்முகனுடைய கொள்ளுப்பேரன். விச்சிரவா என்பவனுக்கு மைந்தன். குபேரன் பிறந்தவுடனே தன் தந்தையைப் பணிந்து, ''நான் செய்யவேண்டியதைத் தெரிவித்தருள்க'' என்று வேண்டினான். விச்சிரவா தன் மைந்தனைப் பார்த்து, ''இறைவனை நோக்கித் தவம் புரிக'' என்று கட்டளையிட்டான். குபேரன் மீண்டும் தன் தந்தையைப் பார்த்து, ''இறைவனுடைய தன்மை எத்தன்மையது? அதனைக் கூற வேண்டும்.'' என்று வேண்டிக்கொண்டான்.

விச்சிரவா தன் மைந்தனைப் பார்த்து, ''இறைவன் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலுக்கும் முதல்வனாவான். உலகத்து உயிர்த்தொகைகளுடைய துன்பத்தைப் போக்கிச் சுகத்தைச் செய்தலால் சங்கரன் எனவும், எல்லா உயிர்கட்கும் நன்மையைச் செய்தலால் சிவன் எனவும் கூறப்படுவான். அவனுடைய பெயர் இன்னும் பலவாகும். அவன் எல்லோரினும் பெரியவன் ஆவான். ஞாயிறு திங்கள் முதலியவற்றின் இயக்கமும் நான்முகன் திருமால் முதலியோர்களுடைய தொழிலும் அப்பெருமானால்தான் நிலைபெறு கின்றன. அப்பெருமானுடைய பெருமை எவராலும் கூறமுடி யாது. அப்பெருமானை வழிபடுதலால் கல்வி, செல்வம், போகம், ஆயுள் முதலிய நன்மைகள் எல்லாவற்றையும் அடையலாம். மேலும் மெய்யறிவையும் வீடு பேற்றையும் அடையலாம். அந்தணர்களைக் கொலை செய்த தீவினை; தாய் தந்தை மக்கள் முதலியவர்களைக் கொன்றதனால் உண்டாகிய தீவினை, மற்றைத் தீவினைகள் ஆகியவைகளெல்லாம் இறைவனு டைய பெயரைக் கூறிய அளவில் நீங்கும். ஆகையால் நீ பரமசிவனுடைய திருவடிகளை நினைத்துத் தவஞ்செய்வாயா னால் உனக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும். ஆகவே அப் பெருமானை எண்ணித் தவம் புரிவாயாக'' என்று கூறினான்.

குபேரன் தந்தையைப் பணிந்து தவம்புரியச் சென்றான் மகாமேருமலையில் ஓரிடத்தில் அமர்ந்து தவஞ்செய்தான். சிலநாள் கிழங்குகளை உண்டான்; சிலநாள் கனிகளைத் தின்றான்; சிலநாள் பசிய காய்களைத் தின்றான்; சிலநாள் சருகுகளை உண்டான்; சிலநாள் தண்ணீரைக் குடித்தான்.

சிலநாள் காற்றை அருந்தினான். சிலநாள் எதுவும் உண்ணாமல் இருந்தான். இப்படியே ஆயிரம் ஆண்டுகள் சிவபெருமானைக் குறித்து அருந்தவம் புரிந்தான். சிவபெருமான் உமாதேவியோடு குபேரனுக்குக் காட்சி கொடுத்தார். குபேரன் சிவபெருமானைப் பணிந்து போற்றினான். நின் எண்ணம் யாதென்று கேட்ட இறைவனைப் பார்த்துக் குபேரன், ''நின் திருவடிக்கண் குறையாத அன்பு வேண்டும்; ''பெருஞ்செல்வம் வேண்டும்; புட்பக விமானம் வேண்டும்; நர வாகனம் வேண்டும்; வடதிசையை அரசாட்சி புரியும் பெருஞ்சிறப்பு வேண்டும் இவைகளை அடியேனுக்குக் கொடுத்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான்.

## வீரவனத்திற்குச் செல்லக் கட்டளை

குபேரன் வேண்டுகோளைக் கேட்ட சிவபெருமான் குறுநகை கொண்டார். ''பூவுலகில் நாம் எழுந்தருளியுள்ள பதிகளில் ஒரு சிறந்த பதிக்குச் சென்று தம்மை வழிபட்டு நீ விரும்பியவைகளை அடைவாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளினார். குபேரன் மீண்டும் இறைவனைப் பார்த்துத் தேவரீர் எழுந்தருளியுள்ள சிவப்பதிகளில் சிறந்த பதி ஒன்றை அடியேனுக்குத் தெரிவித்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். சிவபெருமான் குபேரனைப் பார்த்துப் 'பாண்டி வளநாட்டிலே குருந்தவனத்திற்கு மேற்கே, மருதவனத்திற்கு (கண்டதேவி) வடக்கே, சமிவனத்திற்கு (கோயிலூர்) கிழக்கே, வெள்ளாற்றிற்குத் தெற்கே வீரவனம் என்னும் பெயருடைய ஓர் இடம் இருக்கிறது. மற்றைப் பதிகளைவிட அப்பதியிலே நாம் மிகுந்த விருப்புற்று, உமையவளுடன் வீரசேகரர் என்னும் திருப்பெயரைத் தாங்கி எழுந்தருளியுள்ளோம். அந்த இடம் மிகுந்த சிறப்புடையது. நீ அவ்விடத்திற்குச் சென்று தவம் புரிவாயாக'' என்று கூறி மறைந்தருளினார்.

குபேரன் வழியில் உள்ள பதிகளையெல்லாம் கண்டு வழிபட்டுக்கொண்டு பாண்டிய நாட்டை அடைந்தான். வீரவனத்தைச் சேர்ந்து சோழ தீர்த்தத்தில் மூழ்கினான். வீரசேகரரையும் உமையாம்பிகையையும் போற்றி வணங்கினான். பின்னர்த் தவம்புரியத் தொடங்கி நூறாண்டுகள் தவம் புரிந்தான்.

### குபேரன் அருள் பெறல்

வீரசேகரப்பெருமான் குபேரனுடைய தவத்திற்கு உள்ளம் மகிழ்ந்தார். உமாதேவியோடு தோன்றிக் காட்சி தந்தார். குபேரனைப் பார்த்து, "ஓ குபேரனே! நீ விரும்பியவை களையெல்லாம் தந்தோம் நீ தங்குகிற நகரத்தின் பெயரை இப்பதியும் எய்தும். ஆகவே நீ நின்னுடைய அளகைப்பதியை அடைந்து அரசு புரிந்து வாழ்வாயாக" என்று கூறி உமையவ ளோடு மறைந்தருளினார். குபேரன் மகிழ்ச்சி கொண்டான். பூசை திருவிழா முதலியவற்றை வீரசேகரப்பெருமானுக்குச் செய்து வழிபட்டான். பிறகு தன்னுடைய நகரத்தை அடைந்து அரசியற்றிக் கொண்டிருந்தான். அன்றுமுதல் வீரவனம் அளகை என்னும் பெயரையும் பெற்றது.

## 8. சத்தியபுட்கரிணி

### ஆதானம் பெற்ற அந்தணன்

பாண்டி நாட்டிலே மங்கலம் என்னும் ஊரிலே வேளாளன் ஒருவன் இருந்தான். அவன் நற்குணமும் நற்செயல்களும் உடையவன். இறைவன் இடத்திலே அன்பு கொண்டவன். அவனுக்கு நெடுநாள் வரையிலும் மகப்பேறு உண்டாகவில்லை. அவன் தன்னுடைய நிலம் வீடுவாசல் முதலிய எல்லாவற்றையும் விற்றுப் பொருளாக்கிக்கொண்டு தன் மனையாளுடன் காசிக்குப் போய் இறைவனை வழிபட்டுத் தவஞ்செய்ய எண்ணினான். அப்போது தனக்கிருந்த ஆக்களில் பத்தை இறைவனிடத்தில் அன்புள்ளவனும் கல்வி கேள்விகளில் வல்லவனும் ஆகிய ஓர் அந்தணனுக்குத் தானமாகக் கொடுத்தான். மற்றவைகளை இடையன் ஒருவனிடம் விற்றுவிட்டுத் தான் காசிக்குச் சென்று விட்டான். நாட்கள் பல சென்றன. அந்தணனிடம் இருந்த ஆக்கள் இடையனிடம் விற்கப்பட்ட பழகிய ஆக்களோடு போய்ச் சேர்ந்துவிட்டன.

ஆக்களைக் காணாத அந்தணன் தேடிக்கொண்டு வந்து அவைகளை இடையன் இடத்திலே கண்டான். இடையனைப் பார்த்து, "என்னுடைய ஆக்கள் பத்து நின்னுடைய மந்தையிலே வந்து சேர்ந்துவிட்டன. அவைகளை என்னிடங்கொடுத்து விடுவாயாக" என்று கேட்டான். இடைமகன் ஆக்களைக் கொடுக்க இணங்கவில்லை. அவைகள் தன்னுடையவைகளே

என்று வல்லடி வழக்குப் பேசத் தொடங்கினான். அந்தணனைப் பார்த்து, ''உன்னுடைய ஆக்கள் என்பதற்கு அறிகுறி காட்டு வாயாக'' என்று கேட்டான். ''அறிகுறி ஒன்றும் இல்லை. இஃது இஃது என்னுடைய ஆக்களாகும் விட்டு விடுவாயாக'' என்றான். (இடையனுக்குப் புத்தி பிடரியிலே) ஆகையால் அவன் ''எல்லாம் என்னுடையதேயாகும். நீ சாட்சிக்காரர்களை அழைத்துக்கொண்டு வந்தாலும் நான் ஆக்களை விடமாட்டேன்'' என்று கூறிவிட்டான்.

அந்தணன் அவ்வூர்க்காரர்கள் சிலரிடம் நிகழ்ந்தவைகளைக் கூறினான் அவர்கள் இடையனை அழைத்துக் கேட்டபொழுதும், ''எல்லாம் என்னுடையவைகளே'' என்று பொய்யுரை புகன்றான். மேலும் அவர்களைப் பார்த்து, ''பழிபாவங்களுக்கு அஞ்சாத இந்தப் பார்ப்பான் பகருவதெல்லாம் பொய். இந்த வழியாக இவனுடைய ஆ ஒன்று வந்ததைக்கூட நான் பார்க்க வில்லை. எல்லா ஆக்களும் என்னால் மிகுந்த பொருள் கொடுத்து வாங்கப் பெற்றவை. நான் கூறுவது முழுவதும் உண்மை'' என்றான்.

## பாண்டியன்முன் வழக்கு

நடுநிலை பிழையாத அவர்களுடைய அறிவுரையையும் ஆயன் செவியிற்கொள்ளவில்லை. அவர்கள் ஆயனையும் அந்தணனையும் சுகுணபாண்டியனிடம் அனுப்பினார்கள். அறிவற்ற கடையனாகிய இடையன் அந்த வெண்கொற்றக் குடையனிடமும் தடையறப் பொய் பேசினான்.

சுகுணபாண்டியன் இடையனைப் பார்த்து, ''அந்தணன் ஆக்கள் உன் ஆக்களோடு வந்து சேரவில்லை என்று, வீரவனத்தில் எழுந்தருளிய வீரசேகரப்பெருமான் முன் வந்து மொழிவாயா?'' என்று கேட்டான். ''அந்தணன், ஆக்கள் என்னிடம் வந்தன என்று அங்கு வந்தும் கூறுவானாகில் வரவில்லை என்று நானும் உரைப்பேன்'' என்றான். அரசன் அமைச்சர்களையும் வழக்காளர்களையும் அழைத்துக்கொண்டு வீரவனத்தை அடைந்தான்.

## இடையன் கண் இழத்தல்

அரசன் வீரசேகரப்பெருமான் முன் சென்று, ''ஐயனே! அமலனே!! காலகாலனே!!! என்னை ஆண்டவனே!!!! உண்மை

வெளிப்படுமாறு திருவருள் செய்வாயாக'' என்று வேண்டிக் கொண்டான். வீரசேகரப்பெருமான் உண்மையை வெளிப் படுத்தத் திருவுளங்கொணடார். ''அரசனே! இந்தச் சோழ தீர்த்தத்தில் இருவரும் முழுகி எழுந்தால் உண்மை வெளிப்படு'' மென்று விண்ணொலியாகக் கூறியருளினார். பாண்டியன் அதனைக்கேட்டு மகிழ்ச்சியடைந்தான். எல்லோரையும் சோழ தீர்த்தக் கரைக்கு அழைத்துச் சென்றான். ஆயனையும் அந்தணன னையும் பார்த்து, ''நீங்கள் உண்மையைக் கூறி இந்தப் பொய்கையிலே முழுகுங்கள்'' என்று கட்டளையிட்டான்.

''இடையனுடைய ஆன் கூட்டத்தில் என்னுடைய ஆன்கள் பத்துப் புகுந்திருக்கின்றன'' என்று கூறி அந்தணாளன் சிவகங்கையில் மூழ்கிக் கரையில் ஏறினான். அவனுக்கு முதுமை நீங்கி இளமை உண்டாகியிருந்ததுடன் சந்தனம் மாலை ஆகியவைகளை அணியப்பெற்றவனாகவும் விளங்கினான். கண்டவர்கள் ''சிவசிவ'' என்று ஆரவாரஞ் செய்தார்கள். பூமாரி பொழிந்தது.

பாண்டியன் உவப்படைந்தான் இடையனை நோக்கி, ''நீயும் உண்மையை உரைத்து மூழ்குவாயாக'' என்று கட்டளையிட்டான். கோனான், ''கோக்கள் முற்றும் என்னுடையவைகளே'' என்று கூறித் தீர்த்தத்தில் மூழ்கி எழுந்தான். அவனுடைய கண்கள் இரண்டும் குருடாகிவிட்டன. கோனான் மிகுந்த அச்சமடைந்து தண்ணீருக்குள்ளே தடுமாறிக் கொண்டு நின்றான். மடையனாகிய இடையனுடைய நிலையைக் கண்ட பாண்டியன். ''இந்த அறிவிலியின் கையைப் பிடித்துக் கரையேற்றுங்கள்'' என்றான். அண்மையில் நின்ற ஒருவன் தண்ணீரில் இறங்கி ஆயனைக் கரையேற்றினான்.

## ஆயன் அறிவுபெறல்

இப்புதுமையைக் கண்டோர் இடையனின் மடமைக்கு இரங்கினார்கள். அரசன் ஆயனைப் பார்த்து, ''ஏட! நீ என்ன காரியஞ்செய்தாய்? இப்பொழுதேனும் அந்தணாளனுடைய ஆக்கள் பத்தையும் கொடுப்பாயா? கொடுக்கமாட்டாயா?'' என்று கேட்டான். இடையன் அரசனைப் பார்த்து, ''வருவதறி யாமல் இவ்வாறு கெட்டுப்போனேன். பத்து ஆக்கள் மட்டும் அல்ல; மேலும் பத்து ஆக்களை அந்தணன் வாங்கிக்கொள்க. கண்கண்ட தெய்வமாக விளங்கும் வீரசேகரப்பெருமான்

என்னுடைய பொருள்கள் எல்லாவற்றையுங் கவர்ந்துகொள்க. நான் இந்தக்கடவுளுக்கு வழிவழி அடிமை செய்வேன். கண்களை இழந்து உயிர் வாழேன். எனக்கு இரங்கியருள வேண்டும். அறிவில்லாமல் நான் செய்த குற்றத்தைப் பொறுப்பது அறமாகும். என் குருட்டைக் கடவுள் நீக்கியருளும்படி செய்ய வேண்டும்'' என்று பலவாறுகூறி அரசனைத் தொழுதான்.

இந்தக காட்சியைக் கண்டவர்கள் இடையனுக்காக இரங்கினார்கள். பாண்டியனும் இரங்கினான். ''இந்தத் தீர்த்தத்தில் இன்னும் இவன் மூழ்குமாறு செய்வாயாக'' என்று உருவிலிச் சொல் எழுந்தது. அதனை எல்லோரும் கேட்டார்கள்.

அரசன் ஆயனைப் பார்த்து, ''மீண்டும் இந்நீரில் மூழ்குவாயாக!'' என்று கட்டளையிட்டான். இடையன் அஞ்சி இன்னும் என்ன தீமை நேருமோ என்று கலங்கித் தீர்த்தத்தில் மூழ்கினான். குருடான அவனுடைய கண்கள் இரண்டும் பார்வையைப் பெற்றன. அரசன் முதலியோர் மகிழ்ச்சியடைந் தார்கள். உண்மையை வெளிப்படுத்தியபடியால் சிவகங்கை யாகிய சோழ தீர்த்தம் **சத்தியபுட்கரிணி** என்னும் பெயரையும் அடைந்தது.

இடையன் அந்தணாளனுக்கு அவனுடைய ஆக்களோடு மேலும் பத்து ஆக்களைக் கொடுத்தான். தன் செல்வத்தை வீரசேகரருக்கு உரிமையாக்கித் தான் தனக்கேற்ற தொண்டு செய்துகொண்டிருந்தான். அந்தணன் ஆக்களையெல்லாம் இறைவனுக்கே கொடுத்துவிட்டான். பாண்டியன் வீரசேகரரைப் போற்றி அமைச்சர் முதலியோருடன் மதுரையை அடைந்தான். தொண்டு செய்துகொண்டிருந்த ஆயன் இறுதியில் சிவபிரானு டைய திருவடிகளை அடைந்தான்.

## 9. திருமால் பூசித்தது

### சாபம் பெற்ற திருமால்

ஒரு காரணத்தை முன்னிட்டுத் திருமாலைப் பிருகு முனிவர் ''பத்துப் பிறப்புக்களை எடுத்துப் பூவுலகில் உழல் வாயாக'' என்று சபித்தார். சாபத்தைப் பெற்ற திருமால்,நாம் நிலவுலகில் பிறந்து உழலும்போது பகைவர்களால் தோல்வி யடையாமல் இருக்க வேண்டுமே அதற்கு யாது செய்யலாம் என்று எண்ணமிட்டார். சிவபெருமான் திருவடிகளைப் போற்றி

வழிபட்டால் நன்மை உண்டாகும் என்று முடிவு செய்தார். அதற்குத் தக்க இடம் வீரவனமே என்று திருவருளால் தேறினார். புறப்பட்டு வீரவனத்தை அடைந்தார். சிவகங்கையில் மூழ்கினார்; திருவெண்ணீற்றை அணிந்தார்; கண்மணி மாலையைப் புனைந்தார்; கோவிலுக்குட் புகுந்து நந்தி தேவரைப் போற்றினார்; பிறகு உள்ளே சென்று வீரசேகரப் பெருமானுக்கும் உமையவளுக்கும் அபிடேகம் செய்து வாசனைப்பொருள்கள் அணிந்து மலர்மாலைகள் புனைந்து இனிய உணவுகளைப் படைத்துப் புகழ்ந்து போற்றலானார்.

### வீரசேகரரைப் புகழ்ந்து பாடுதல்

எண்ணிய வாறடி யார்பெற
மேய இரும்பேறே
புண்ணியர் பாலக லாதுவி
ளங்குறு பொன்னேஉள்
கண்ணிய யோகர் கருத்தி
னிருங்கதிர் கான்றோங்கும்
அண்ணிய செஞ்சுட ரேயுன்
அடைக்கலம் அடியேனே. (1)

கற்பனை யத்தனை யுங்கட
வாவொளிர் கனவாழ்வே
தற்பர ஞானசொ ரூபகு
ணாதிச யத்தேவே
புற்புத மாமுடல் வாழ்க்கையெ
ணாருட் பொலிகோவே
அற்புத சிற்பர னேஉன்
அடைக்கலம் அடியேனே. (2)

பிணிகிளர் மெய்யும் அதிற்புகும்
வாழ்வும் பெரிதென்றே
துணிகிளர் சிந்தையர் என்றுமு
றாத சுயஞ்சோதி
கணிகிளர் கொன்றைந றுந்தொடை
வேணிய காபாலி
அணிகிளர் வீரையு ளாய்நின்
அடைக்கலம் அடியேனே. (3)

பெயர்வரு நோய்பல வற்றுளும்
வெய்துபி றப்பாய

கயமிகு நோயென ஓதுவர்
அந்தக் கடுநோய்கள்
உயலரி தாமொரு பத்துடை
யேனென் றொழிவேனோ
அயர்வறும் வீரையு ளாய்நின்
அடைக்கலம் அடியேனே. (4)

பூதரம் நாணிடு புங்கவ!
சங்கம் புரிகாத!
மாதர மேயவு மாதர!
ஓதர! மணிகண்ட
சீதரன் ஆம்ளனை ஆதிய
ராலுந் தெரிவொண்ணா
ஆதர! வீரையு ளாய்நின்
அடைக்கலம் அடியேனே. (5)

என்று துதித்து வணங்கினார்.

### சிவபிரான் அருள் புரிதல்

திருமாலின் வழிபாட்டைக் கண்டு சிவபிரான் மகிழ்ந்தார். அவர்முன் தோன்றி, ''திருமாலே! கேட்பாயாக! நீ சிறந்த இப்பதியை அடைந்து நம்மை வழிபட்டபடியால்,நீ எடுக்கப் போகும் பத்துப் பிறவிகளும் உலகத்திற்கு உதவியாக இருக்குமாறு அருள்புரிந்தோம். இப்பதியில் வைகும் தவத்தினர் வீரம் முதலியவைகளை அடைகுவர். ஆகவே நீயும் நிருதி திக்கிலே ஒரு கோயில் கொண்டு அமருவாயாக! நீ வீரத்தை வேண்டி வசந்த காலத்திலே நம்மை வழிபட்டபடியால், உனக்கு வீரவசந்தத் திருமால் என்னும் பெயர் ஏற்படும்'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார், திருமாலும் அவ்வாறே நிருதி திக்கில் கோயில் கொண்டு எழுந்தருளினார்.

## 10. வீரராகவன்

### இராமாயணம்

சரயு என்னும் ஆறு, வளத்தைப் பெருக்கும் கோசல நாட்டில் அயோத்தி என்னும் நகர் உள்ளது. அந்நகரத்தைத் தசரதன் என்னும் அரசன் அரசாட்சி புரிந்தான். அவனுக்கு இராமன், இலட்சுமணன், பரதன், சத்துருக்கனன் என்று நான்கு மைந்தர்கள் தோன்றினார்கள். அவர்களுள் இராமனையும்,

இலட்சுமணனையும் விசுவாமித்திரர் அழைத்துச் சென்றார். இராமன் தாடகை, மாரீசன் முதலியவர்களை அழித்து முனிவர் தவத்தை நிறைவேற்றினான். அகலிகையின் சாபத்தை இராமன் போக்கினான். பிறகு மிதிலைக்குச் சென்று வில்லை வளைத்துச் சீதையைத் திருமணம் புரிந்தான். பிறகு நாட்டை அடைந்தான். கைகேயி விருப்பப்படி தம்பியுடனும், மனைவியுடனும் காட்டிற்குச் சென்றான். பஞ்சவடி தீரத்திலே தங்கியிருந்தபோது இராவணன் என்பவன் சீதையைக் கவர்ந்து சென்றான். பிறகு இராமன், அநுமான், சுக்ரீவன் முதலியவர்களின் துணையால் படை திரட்டிக் கொண்டு இராவணனோடு போர் செய்யப் புறப்பட்டான். தென்பாண்டி நாட்டைச் சேர்ந்தான். பொதிகை மலையை அடைந்து அகத்தியரைப் போற்றினான். தனக்கு நல்ல வீரம் உண்டாவதற்கு வழி யாது? என்று அகத்தியரைக் கேட்டான். அகத்தியர் இராமனைப் பார்த்து, ''வீரவனம் என்னும் பெயருடைய சிவப்பதி ஒன்று இருக்கிறது. நீ அங்குச் சென்று சிவபெருமானைப் போற்றுவாயானால் வீரம் முதலிய சிறப்புக்கள் உண்டாகும்'' என்று கூறி வீரவனம் இருக்கும் இடத்தையும் அதன் பெருமையையும் விளக்கமாகக் கூறி அருளினார்.

## இராமபிரான் வீரவனம் அடைந்து வீரசேகரரைப் போற்றுதல்

இராமபிரான் புறப்பட்டு வீரவனத்தை அடைந்தான். சிவகங்கையில் நீராடினான்; கண்மணிமாலை திருநீறு முதலிய அணிந்து திருக்கோயிலுக்குச் சென்றான். நந்தி தேவரைப் பணிந்து கோவிலை வலஞ்செய்தான். பிறகு வீரசேகரப் பெருமானுக்குப் பூசை வழிபாடு முதலியன புரிந்தான். அதன் பின் இறைவனைப் புகழத் தொடங்கி;

**உருவாகி அருவாகி**
**உரைத்த [1]உப யமுமாகி**
**மருவாகி மலராகி**
**வான் முதற்பூ தமுமாகிக்**
**கருவாகிக் கண்ணாகிக்**
**கண்ணுள்மணி ஆகிநிறை**
**திருவாகி ஒளிர்வீர**
**சேகரநின் பதம்போற்றி.** (1)

---

1. உபயம் - இரண்டு. அருவுருவம் - அருவமும் உருவமும் சேர்ந்த வடிவு.

பண்ணிசைவெங் கதிர்கிரணம்
[1]பாணியுவர் மலர்நாற்றம்
விண் [2]ணனிலம் உடலமுயிர்
விழியொளி ஒண் மணிபிரபை
[3]எண்ணறுநெய், நிலவுகலை,
எனக்கலந்த இறையவனே
திண்ணவய விடைவீர
சேகரநின் தாள்போற்றி. (2)

வெய்யகரி அதள்உரித்து
மேனிமறைத் தவபோற்றி
வையமிசை [4]நடாயொருமும்
மதிலுமெரித் தவபோற்றி
கையமைதண் டொடுவருவெங்
காலனைக்காய்ந் தவபோற்றி
செய்யமழுப் படைவீர
சேகரநா யகபோற்றி. (3)

[5]வரையடியிற் கிடந்தரக்கன்
வாயலறி ஓலமிடப்
புரையிலடி விரல்நுதிசற்
றழுத்தியபுண் ணியபோற்றி
விரைமலர்மங் கையர்முதலோர்
மென்களத்துப் பொன்பொலியத்
[6]திரையெழுநஞ் சயில்வீர
சேகரநா யகபோற்றி. (4)

மாயவலி வாளரக்கன்
வஞ்சிக்க [7]மருவலரும்
ஆய[8]பரா பவமுநனி
அடைந்தடியேன் [9]அல்லாந்து
சாயவுநின் திருவுளமோ
தவாக்கருணை புரியாயோ
தேயமெலாம் புகழ்வீர
சேகரநா யகபோற்றி. (5)

---

1. பாணி - நீர். 2. அநிலம் - காற்று.
3. எண்ணறுநெய் - எள்நறு நெய் - எள்ளினிடத்து எண்ணெய்.
4. நடாய் - நடத்தி, பூமி மீது தேரைச் செலுத்தி என்றபடி.
5. வரை - கயிலாயமலை. 6. திரை - பாற்கடல்.
7. மருவு அலரும் - பொருந்திய பழமொழி.
8. பராபவம் - அவமானம். 9. அல்லாந்து - மனம் கலங்கி.

என்று பாடி வணங்கினான். சிவபிரான் இராமன் முன்தோன்றி, ''இராமனே! அரக்கர் கூட்டத்தை அழித்து ஒழிக்கத் தக்க வீரத்தை இன்று நாம் உனக்குக் கொடுத் தருளினோம். இதனாலே நினக்கு இனிமேல் வீரராகவன் என்னும் பெயர் உண்டாகும். நீ கடலை அடைத்து இலங்கையில் புகுந்து இராவணனைவென்று சீதையை மீட்டு அயோத்திக்குப் போய் உலகாண்ட பின் நின்னுடைய உலகத்தை அடைவாயாக'' என்று கூறி மறைந்தருளினார். இராமன் சிவபிரான் கட்டளைப் படி இலங்கை சென்று இராவணனை வென்று சீதையை மீட்டுக்கொண்டு அயோத்திப் போய்ச் சேர்ந்தான். வீரசேகரப் பெருமானை வணங்கி வீரம் பெற்ற அன்றுமுதல் இராமனுக்கு வீரராகவன் என்னும் பெயர் உண்டாயிற்று.

## 11. கண்ணுதற்பெருமான் கட்டுச்சோறுண்டது.

### வீரவனேசர் வேதியராதல்

வீரசேகரப்பெருமான் மறையவர் கோலந் தாங்கியவராய் ஆவுடையார் கோயில் என்னும் குருந்தவனத்திற்குச் சென்றார். ஆண்டிருந்த மறையவர்கள் வீரவன மறையவரைக் கண்டு, வணங்கி, ''நீர் எந்த ஊர்? உம்முடைய பெயர் யாது? நீர் எந்தக் கலைகளில் வல்லவர்? நீவிர் இங்கு வந்த காரணம் யாது? எல்லாவற்றையும் விளக்கமாகக் கூறுவீராக'' என்று கேட்டனர்.

வீரவன மறையவர் குருந்தவன மறையவர்களைப் பார்த்து, ''நாம் எங்கும் இருப்போம். ஆயினும் வீரவனத்தில் மிகுந்த விருப்பங்கொண்டு அங்கு அதிகமாகத் தங்குவோம். நம்முடைய பெயர் ஆன்மநாதன் என்று சொல்லுவார்கள். நாம் மறைகள் எல்லாவற்றையும் வழுவறத் தெளிந்துள்ளோம். இங்கு க் கற்கக் கூடியவர்கள் எவரேனும் இருப்பின் கற்பிக்கும் எண்ணத்துடன் வந்துள்ளோம்'' என்று கூறினார்.

வீரவன மறையவர் விளம்பியதைக் கேட்ட மற்றைய மறையவர்கள், 'உமது கருத்து அப்படியானால் இங்குக் கற்கக் கூடிய இளமாணவர்கள் பலர் இருக்கின்றார்கள். அவர்களுக்குக் கற்பியும்'' என்று கூறினார்கள். வீரவன மறையவர் அதற்கு உடன்பட்டு அந்த மறையவர்களுடைய இல்லங்களில் உணவு முதலியன உண்டு சிறுவர்கட்கு மறையைப் பயிற்றிக் கொண்டிருந்தார்.

## வழக்குண்டாதல்

அப்பொழுது அவ்வூரில் இருந்த வேளாளர்கட்கும் மறையவர்கட்கும் ஒரு வழக்கு உண்டாயிற்று. ஊரில் உள்ள நிலங்களெல்லாம் தம்முடையதென்றனர் வேளாளர்கள். மறையவர்களோ தம்முடையதென்றனர். அதனால் கலகம் உண்டாகிப் பெருத்தது. இறுதியில் வழக்கு வழுதி மன்னனிடஞ் சென்றது. வேளாளர்கள் வழக்காடுவதில் வல்லவர்களாகவும் செல்வர்களாகவும் இருந்தனர். அவர்களுடைய நிலையைப் பார்த்து அந்தணர்கள் அஞ்சினார். வேளாளர்களோ வழக்காடு வதில் வல்லவர்களாக இருக்கிறார்கள். நாம் அரசனிடம் சென்று என்ன கூறுவது என்று ஏங்கி மிகுந்த வருத்தம் உடையவர்களாக இருந்தனர்.

## திருப்பெருந்துறை

குருந்தவன மறையவர்களின் ஏக்கத்தை வீரவன மறையவர் உணர்ந்தார். அவர் ஏக்கம் அடைந்துள்ள மறையவர்களைப் பார்த்து, ''நீங்கள் எதற்கும் அஞ்ச வேண்டாம். நாம் பாண்டியனிடம் சென்று வழக்குரைத்துத் தொன்றுதொட்டு உங்களுக்கு உள்ள உரிமையை நிலைநாட்டி மீள்வோம். 'நீங்கள் கட்டமுது கட்டிக்கொண்டு உடனே புறப்படுங்கள்'' என்று கூறினார். குருந்தவன மறையவர்கள் அருந்தவ மறையவர் கூறியதற்கு உடன்பட்டார்கள். தயிர்ச்சோறு புளிச்சோறு முதலியவை களைப் பொதிச்சோறாகக் கட்டிக்கொண்டு மதுரைக்குப் புறப் பட்டார்கள். மறையவர் யாவருக்குந் தலைவராய் ஆன்மநாத ஐயர் புறப்பட்டார். எல்லோரும் வழிநடந்து காடு முதலியவை களைக் கடந்து வீர வனத்தை வந்து அடைந்தார்கள். ஆன்மநாத ஐயர் ஆவுடையார் கோவில் ஐயர்களைப் பார்த்து, ''இந்த வீரவனம் கற்றவர் பலரும் போற்றக்கண்ணுதற் பரமன் எழுந் தருளிய நற்றவப் பதியாகும். இப்பதியைக் கண்டு வணங்கப் பெற்றவர்கள்தாம் பேரின்பம் பெற்றவர்களாவர் நாம் இப்பதிக் கண் என்றுங் குறையாத விருப்பம் உடையோம் நாம் இப்பதியில் எழுந்தருளிய நம்பனைப் பூசித்து வணங்கினால் வழக்கு வெற்றி அடையும். ஆதலால் இங்குத் தங்கித் தெய்வ வழிபாடு சாப்பாடு முதலியவைகளை முடித்துக்கொண்டு செல்வோம்'' என்றார். ஆவுடையார் கோயில் ஐயர்கள், ''அப்படியே செய்வோம்'' என்று உடன் பட்டார்கள்.

எல்லோரும் சிவகங்கையில் மூழ்கி வீரசேகரப் பெருமானைப் பூசித்துத் தொழுதார்கள். பிறகு சிவகங்கைக் கரையில் உள்ள ஒரு மண்டபத்தில் அமர்ந்தார்கள். இரு மறையவர்கள் இடத்தைத் தூய்மைசெய்து உண்கலம் முதலியவைகள் அமைத்துக் கட்டமுதை அவிழ்த்துப் படைத்து ஊறுகாய் முதலியவைகளையும் வைத்தார்கள். ஆன்மநாத ஐயர் அவ்வுணவினை வீரசேகரப் பெருமானுக்கு நிவேதித்து விட்டு, ''மிக அருமையாக இருக்கிறது'' என்று கூறி நன்றாகச் சாப்பிட்டார். சாப்பாடு முடிந்த பின் எல்லோரும் புறப்பட்டு மதுரைக்குப் போய்ச் சேர்ந்து பாண்டியனைக் கண்டார்கள்.

ஆன்மநாத ஐயரின் தோற்றப் பொலிவைக் கண்ட பாண்டியன், இவர் கற்றுவல்ல மாண்பினர் என்று மதித்தான். தகுந்த இருக்கையில் இருக்கச்செய்து போற்றினான். வழக்குத் தொடங்கியது. பாண்டியன் வேளாளர்களைப் பார்த்து, ''நீங்கள் உங்களுடைய தென்று உரிமைகொண்டாடும் நிலத்திற்கு அறிகுறியாது?'' என்று உசாவினான். வேளாளர்கள் எந்த இடத்தில் எவ்வளவு ஆழந்தோண்டினாலும் நீர் சிறிதும் உண்டாகாது எங்களுடைய நிலம் என்பதற்கு இதுதான் அறிகுறி என்றார்கள். பின்னர் பாண்டியன் மறையவர்களைப் பார்த்துக் கேட்டான். உடனே ஆன்மநாதஐயர், ''எந்த இடத்தில் மண் வெட்டியைக் கொண்டு வெட்டினாலும் உடனே நீர் வெளிப்படும்'' எங்களுடைய நிலம்' என்பதற்கு இதுதான் அறிகுறி என்றார்.

பாண்டியன் இதனை நேரில் ஆராய்ந்துபார்க்க எண்ணினான். வழக்காளிகள் எதிர் வழக்காளிகள் ஆகிய இரு சாராரோடும் குருந்தவனத்திற்கு வந்தான் ஆன்மநாதஐயரைப் பார்த்து, ''வேளாளர்கள் சொல்லியதை ஆராய்ந்து பார்க்க வேண்டிய தில்லை வெட்டிய இடமெல்லாம் தண்ணீர் உண்டாகும் என்னும் உங்களுடைய கூற்றை மெய்ப்பியுங்கள்'' என்றான்.

உடனே ஆன்மநாதஐயர். ''மண்வெட்டியினால் எந்த இடத்தில் வேண்டுமானாலும் வெட்டிப்பார்த்துக்கொள்ளலாம்'' என்றார். இதனைக் கேட்ட ஆவுடையார்கோயில் ஐயர்கள் வெட்டிய இடத்தில் நீர் உண்டாகிறதோ இல்லையோ தெரிய வில்லையே. நீர் உண்டாகாவிட்டால் நாம் யாது செய்வோம் என்று வருந்தி நின்றார்கள். பாண்டியன் மண்வெட்டி ஒன்றை வேளாளர்களிடம் கொடுத்து, ''எவ்விடத்திலேனும் வெட்டிப் பாருங்கள்'' என்று கூறினான்.

மண்வெட்டியைக் கையில்பெற்ற வேளாளர்கள் மேடான ஓர் இடத்தைப் பார்த்து வெட்டினார்கள். உடனே தண்ணீர் குபீரென்று வெளிப்பட்டது. அதனைக்கண்டு மேலும் மேலும் மேலான இடங்கட்கு ஓடி ஓடி வெட்டினார்கள். எந்த இடத்தில் வெட்டினாலும் அந்த இடத்தில் நீர் பெருந்துறையாகப் புறப்பட்டது. இதனைப் பார்த்துப் பாண்டியன் மகிழ்ச்சியடைந்தான். அந்தணர்களும் இறும்பூதடைந்தார்கள். வேளாளர்களோ உள்ளம் வெதும்பி நின்றார்கள். விண்ணவர்கள் மலர்மாரி பெய்தார்கள். ஆன்மநாதஐயர் இன்னார் என்று துணிய முடியாமல் எல்லோரும் ஐயங்கொண்டு நின்றார்கள். சில பெரியவர்கள் ஆன்மநாதஐயரைப் பார்த்து, ''தாங்கள் யாவர் என்பதை மறைக்காமல் எங்கட்குத் தெரியப்படுத்த வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார்கள். அவ்வளவில் ஆன்மநாத ஐயர் மறைந்தார். 'நாம் எக்காலத்திலும் வீரவனத்தில் உருவுடன் எழுந்தருளியிருப்போம். இவ்விடத்திலோ உருத்தோன்றாமல் எழுந்தருளி இருப்போம்'' என்று உருவிலி மொழி ஒன்று விண்ணில் உண்டாகியது. ஆன்மநாத ஐயராக விளங்கியவர் வீர வனத்தில் எழுந்தருளிய வீரசேகரப்பெருமானே என்று எல்லோரும் ஐயமற அறிந்துகொண்டார்கள். அதுமுதல் ஆவுடையார்கோயில் திருப்பெருந்துறை என்று வழங்கலாயிற்று. பாண்டியன் வேளளர்களைத் தண்டித்தான்; தன் நகர்க்குச் சென்று இனிது வாழ்ந்திருந்தான்.

## 12. உமையாண்டாள் பெருமை.

### வழிபடுவோர் பெறும்பேறு

வீரவனத்தில் எழுந்தருளிய உமையாம்பிகையின் பெருமை அளவிடற்கரியதாகும். உமையாம்பிகையின் திருவடிகளின் மேல் மறந்தாவது ஒரு மலரை இட்டவர்கள் கற்பக மலர்கள் பலவற்றைச் சூடுவார்கள். மலர்மேல் வாழ்ந்திருப்பார்கள். உமையாம்பிகையின் திருக்கோயிலை ஒருதரம் சூழ்ந்து வலம் வந்தவர்களைத் தேவர்கள் சூழ்ந்து வலஞ்செய்வார்கள்; இந்திரன் வலஞ்செய்வான்; நான்முகன் திருமால் முதலியவர்களுஞ் சூழ்ந்து வலஞ் செய்வார்கள் அவ்வாறாக நிலவுலகத்தில் உள்ளவர்களில் எவரேனுஞ் வலஞ்செய்யாமல் இருப்பார்களோ?

குறைநோய், காசநோய், ஈளைநோய் குன்மநோய், பெருநோய், கண்ணோய், முயலகநோய், வாதநோய்,

பக்கவாதநோய் முதலிய நோய்கள் எல்லாம் உமையாம் பிகையைத் தொழுதால் பறந்தோடும். பிரமராட்சசு, பைசாசம், பூதம் முதலிய ஏவல் தீவினைகளும் உமையாம்பிகையின் பெயரைச்சொன்ன அளவில் தமக்கு அழிவு வந்துவிட்ட தென்று ஒழிந்துபோகும்.

மகப்பேற்றை விரும்பினாலும், உலக சுகபோகங்களை மிகுதியாக அடையவிரும்பினாலும், தேவபோகங்களை யெல்லாம் தக்கவாறு அடைதற்கு எண்ணினாலும், கெடாத பேரின்பத்தை நாடினாலும் அவைகளெல்லாம் உமையாம் பிகையின் திருவருளை விரும்பியவர்கட்கு உண்டாகும்.

உமையாம்பிகையின் திருமுன் சென்று ஒருவர் அன்புடன் தொழுவாரானால், அவர் செய்த தீவினைகளெல்லாம் தாழ்ந்து போகும். தாழ்ந்தவர்கள் எழும்போதே நல்வினையும் எழும். சூழ்ந்து வலஞ்செய்பவர்களைப் போகங்கள் யாவும் சூழும்.

ஒப்பற்ற சிவகங்கையில் மூழ்கி; உடையை உலர்த்தாமல் வலம்புரிந்து; வெள்ளிக்கிழமை தோறும் மாவிளக்கிட்டு நாற்பத்தைந்து நாட்கள் வலஞ்செய்து போற்றினால் மலடியாக இருப்பவளும் மக்கட்பேற்றை அடைவாள்.

எண்ணெய் முதலிய பொருள்களைக்கொண்டு உமையாம் பிகைக்குச் சிறப்பாகத் திருமுழுக்குச் செய்வித்து, மணம் மிகுந்த மலர்களைப் புனைந்து, சுவைமிக்க உணவுகளைப் படைத்து வழிபடுவோர்கள். மனைவி மக்களுடனே உலகத்தில் உள்ள போகங்களை யெல்லாம் நுகர்ந்து, கற்பக நாடாகிய தேவர் உலகிலும் இன்புற்று இறுதியில் சிவலோகத்தை அடைந்து இன்புற்றிருப்பார்கள்.

கல்வியை விரும்பினோர், செல்வத்தைவிரும்பினோர், பகைவரை வெல்ல விரும்பினோர் ஆகியோர் உமையாம் பிகையைப் போற்றினால் விருப்பம் நிறைவேறப் பெறுவர்.

வெள்ளிக்கிழமைதோறும் நூற்றெட்டுச் செவ்வரத்தம் பூக்களாலே மாலை தொடுத்து; உமையாம்பிகைக்கு அணிந்தோர் அளவில்லாத செல்வக் கடலிலே ஆழ்வார்கள்.

உமையாம்பிகையின் திருப்பெயர்கள் ஆயிரத் தெட்டையும் எடுத்துக்கூறிக் குங்குமங்கொண்டு அருச்சனை செய்பவர்கள் தேவர்கட்கு அரசாகிப் பகைவரை வென்று, அரம்பை மாதரின் தோளைத் தழுவி வாழ்வார்கள்.

நறுமணம்பொருந்திய நூற்றெட்டுமஞ்சட்பலகையினாலே உமையாம்பிகையின் நூற்றெட்டுத் திருப்பெயர்களையுங்கூறி அருச்சனை செய்பவர்கள், குபேரசெல்வத்தை அடைந்து வாழ்வார்கள்.

வாசனையை வீசுகின்ற சண்பகப் பூவைக்கொண்டு சிறப்பாக அருச்சனை செய்பவர்கள், சுவாசகாசம் என்னும் நோய் நீங்கப் பெறுவார்கள்.

தும்பை மாலையை மகிழ்ச்சியுடன் கட்டிச் சாத்துபவர்கள், எல்லையற்ற செல்வ நலத்தை நுகர்ந்து கைலையை அடைவது உண்மையாகும்.

பனிநீர் விட்டுச் சந்தனம் அரைத்துக் கருப்பூரம் முதலிய மணப்பொருள்களைக் கலந்து உமையாம்பிகைக்குத் அபிடேகம் செய்பவர்கள், இந்திரபதவி, நான்முகபதவி முதலியவைகளிலே சிறந்து வாழ்ந்து இறுதியிற் சிவலோகத்தை அடைவார்கள்.

வெட்டி வேரைக் கொண்டு உமையாம்பிகையின் வடிவம் முழுவதையும் மறைப்பவர்கள், தெய்வத்தன்மை பொருந்திய பெரிய போகங்களையெல்லாம் நுகர்வார்கள். குற்றமற்ற செம்பொன்னால் வில்வமாலை செய்து அணிபவர்கள்; உலகெலாம் தம் பதத்தைத் தொழத்தக்க சிறப்பினை அடைவார்கள்.

எக்காரணத்தை முன்னிட்டேனும் மாலைப்பொழுதில் உமையாம்பிகையைப் போற்றினால், பெரிய தீவினை களெல்லாம் கதிரவனுக்கு முன்னான பனியைப்போல் நீங்கும்.

உமையாம்பிகையின் கோயிலிலே விளக்கு வைத்தவர்கள் மக்களில் உயர்ந்தவர்களாகி வாழ்வார்கள்.

## உமையாம்பிகை துதி

மலையர சுயிர்த்த மடநடைப் பிடியே!
வழுத்துநர் எய்ப்பினில் வைப்பே
கலைமறை முழுதாய் அம்மறை தோன்றும்
காரண மாய்ப்பொலி பரையே!
நிலைநிலை யாமை உணர்ந்தமெய்ஞ் ஞான
நீதியார் உளத்தளி விளக்கே!
தலைமைசால் வீரை வீரசே கரர்பால்
தயங்குமை யேஉனைத் தொழுதேன். (1)

நலமலி பரையே! ஆதியே விருப்பே
ஞானமே கிரியையே என்னப்
புலமலி ஓரைஞ் சத்திக ளாகிப்
புவனமெங் கனும்படைப் பாதிக்
குலமலி தொழிலோர் ஐந்துநன் றமைந்து
குலவுற முடித்துநிற் பவளே
அலமலி வீரை வீரசே கரர்பால்
அமருமை யேஉனைத் தொழுதேன். (2)

தெளிவளர் உள்ளத் தூற்றெழும் அமுதே
சிந்திக்கத் தித்திக்குங் கரும்பே
ஒளிவளர் ஞான யோகர்தம் உள்ளத்
தொழிதரா தெழுகொழுஞ் சுடரே
களிவளர் அன்பின் நெக்குநெக் குருகக்
கற்றவர் கவர்தருங் கனியே
அளிவளர் வீரை வீரசே கரர்பால்
அமர்உமை யேஉனைத் தொழுதேன். (3)

மறைநெடு முடியென் றுரைசெயுந் தளிர்த்த
மாந்தருப் பயில்கருங் குயிலே
நிறையளி அமைய நெக்குநெக் குடைவார்
நெஞ்சமாம் புலத்தெழு கரும்பே
குறையறத் துதிப்பார் வாக்கெனுங் கடலில்
கொழிசுவை கழீஇயெழும் அமுதே
அறைவளர் வீரை வீரசே கரர்பால்
அமர்உமை யேஉனைத் தொழுதேன் (4)

எண்ணரும் புவனப் பரப்பெலாம் வருந்தா
தீன்றினி தளித்திடும் தாயே
கண்ணரும் அளவின் மந்திரங் களுக்கும்
காரண மாயசிற் பரையே
எண்ணருஞ் சுகுண ஞானயோ கியர்தம்
இருதயத் தடத்துலாம் அனமே
அண்ணரும் வீரை வீரைசே கரர்பால்
அமர்உமை யேஉனைத் தொழுதேன். (5)

ஆன்றவே தாந்தப் பெருவரை ஒழியா
ஆனந்த உரும்முகில் நோக்கிச்
சான்றமா நடனம் புரிபசு மயிலே
சச்சிதா னந்தமெய் வாழ்வே

ஏன்றபல் லுயிர்க்கும் மலவலி அகற்றி
இரிதரா இன்பருள் முதலே
தோன்றநற் றலமாம் வீரைவாழ் உமையே
துணைத்தநின் பொன்னடி போற்றி. (6)

ஆயபல் புவனப் பரப்பெனும் வயலுள்
அமைதரும் உயிர்ப்பயிர் பலவும்
மேயபல் சனனக் கோடைவெப் பொழிந்து
விழைகதிச் சீதளம் அடையப்
பாயவான் கருணைப் பெருமழை பொழியும்
பச்சைமா மேகமே பரவிச்
காயவா ணர்கள்சூழ் வீரைவாழ் உமையே!
கருதும்நின் பொன்னடி போற்றி! (7)

கருங்குழல் போற்றி செய்யவாய் போற்றி
கதிர்த்தெழு வெண்ணகை போற்றி
இருங்குழல் பணிக்கும் பனிமொழி போற்றி
இணைதப அருள்விழி போற்றி
மருங்குழல் பொருட்டுப் பணைத்தெழு ஞான
வனமுலை போற்றியென மனஞ்சார்ந்
தொருங்குழல் பயிலும் இணையிலா வீரை
உமைநின பதமலர் போற்றி. (8)

இப்படிப் பலவாறு புகழ்ந்துபாடி உமையாம்பிகையைத் தொழுது வாழ்த்துவோர்கள், துன்பங்கள் யாவும் நீங்கப்பெற்று கற்பக நாட்டையடைந்து சிறந்து வாழ்ந்திருந்து பின் சிவலோகத்தை அடைவார்கள்.

## 13. வீரவனச்சிவப்பதியின் மேன்மை.

### வீரவனம்

பூவுலகில் சிறந்து விளங்கும் காசி முதலிய சிவப்பதிகள் பலவற்றுள்ளும் வீரவனம் சிறப்புடையதென்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகப் பெறப்படும். கண்ட சோழனுக்குப் பல சிவப் பதித் தெய்வ வழிபாட்டினாலும் தீராத குட்டநோய் இச் சிவப்பதியில் தீர்ந்தபடியால் இப்பதி சிறந்தது என்றதற்குச் சிறிதும் ஐயமில்லை.

### வீரவனப் பெருமையை விரும்புவோர்.

வீரவனப் பெருமையை விரும்புவோர் சிவசாலோகத்தை அடைவார்கள். வீரவனப் பதியைக் கண்டோர் சிவசாமீபத்தை

அடைவார்கள். வீரவனப்பதியில் வாழ்ந்தோர் சிவசாரூபத்தை அடைவார்கள். வீரவனப் பதியில் இறந்தவர்கள் சிவத்தொடு இரண்டறக் கலப்பார்கள்.

## சில சிறப்புக்கள்

வீரவனத்தில் வாழும் உயிர்களைக் கண்டு நமன் அஞ்சுவான். நான்முகன், திருமால், இந்திரன் முதலியோர் அப்பதியில் வாழ்தலை விரும்புவர்கள். காடுகளில் இருந்து கந்த மூலங்களை உண்டு தவஞ்செய்பவர்கள் முதலியோர் அடையும் பேற்றை இப்பதியில் உண்டு வாழ்பவர்கள் அடைவார்கள். வீர வனத்தில் வாணாள் முழுதுந் தங்கியிருப்பது நல்லது. அது முடியாமலிருக்குமானால் சில ஆண்டுகளேனும் தங்கியிருத்தல் நல்லது. அதுவும் முடியாமற்போனால் ஓராண்டு அரையாண்டாவது தங்கியிருத்தல் நல்லது, இதுவும் முடியாமற்போனால் ஒரு திங்களாவது தங்குவது நல்லது. இதுவும் இயலாதெனின் பதினைந்து நாளாவது தங்கியிருத்தல் நல்லது. இதுவும் முடியாவிட்டால் ஒரு வாரமாவது தங்குதல் அமையும். ஒரு வாரம் தங்குவதற்கும் இயலவில்லை எனின் ஒருநாளாவது தங்கவேண்டும். ஒருநாள் தங்கவும் இயலாதெனில் ஒரு யாமமாவது தங்க வேண்டும். ஒரு யாமங்கூடத் தங்க முடியாதவர்கள் ஒரு முகூர்த்த காலமாவது தங்கவேண்டும். ஒரு முகூர்த்தங்கூட தங்கமுடியாதென்னும் அறிவிலிகட்கு நாம் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை.

## வேறு காரணத்தால் தங்குதல்

விலைமகளிர் விருப்பினாலாவது வாணிகக் கருத்தினாலாவது அல்லது வேற்றூர்க்குச் செல்லும்போது பொழுதுபோய் விட்டதென்னும் எண்ணத்தினாலாவது, அன்றி வேறு எந்த விதத்தினாலாவது வீரவனத்திலே தங்கினால் தீரா வினைகளெல்லாம் நீங்கத் தூய்மையுடையவர்களாவார்கள்.

## உணாக்கொடை

வேறு சிவப்பதியில் நூறாயிரம் அந்தணர்கட்கு அறுசுவை நெய் பால் முதலியவற்றோடு உணவிடும் பலன் இப் பதியில் ஒருவருக்கு இடுதலாற் பெறலாம். இப்பதியில் அணுஅளவு அறஞ்செய்தாலும் மேரு அளவாகப் பெருகும். இந்தப் பதியில் அந்தணர்கட்கு இருக்கை நல்கி உணவிடும் கடமையை மேற்கொண்டவர்கள், பல பிறவிகளின் தீவினைகளையும்

போக்கி நல்வினை உடையவர்களாவார்கள். இச் சிவப்பதியில் சிவனடியார்கட்கு உணவிடுபவர்கள் அடையும் பேற்றை எவராலும் இயம்ப முடியாது.

**சிவகங்கை**

சத்திய தீர்த்தம் சோழதீர்த்தம் என்னும் பெயர்களை யுடைய சிவகங்கை எத்தகைய தீவினையையும் போக்கும். இந்தத் தீர்த்தத்தில் முழுகினாலும், பருகினாலும், தொட்டாலும், பார்த்தாலும் தீவினைகள் யாவும் நீங்கிப்போகும். இந்தச் சிவகங்கைத் தீர்த்தம் காசிக் கங்கையைப்போல் சிறப்புடையது. ஆண்டுப் பிறபபு, அமாவாசை, பௌர்ணமி, கிரகணகாலம், மாதப் பிறப்பு, உத்தராயணம், தட்சணாயனம் ஆகிய நல்ல காலங்களிலே மூழ்கினால் தீவினைகள் யாவும் நீங்கும். சிவ பிரானுக்குக் குற்றஞ்செய்தபடியால் உண்டான தீவினை, சிவனடியார்கட்குத் தீமைசெய்த படியினால் உண்டான தீவினை முதலிய எல்லாத் தீவினைகளும் இத்தீர்த்தத்தில் முழுகினால் ஒழிந்துபோகும். இத் தீர்த்தத்தில் மூழ்கிக் கரையில் இருந்து தர்ப்பணம் சிரார்த்தம் முதலியவைகளைச் செய்தவர்கள் தம் குலத்தினரை யெல்லாம் சிவகதியிற் சேர்த்தவர்களாவர். இந்தத் தீர்த்தத்திலே தோய்ந்த காற்று மேலே பட்டாலும் பலவகையான தீவினைகளும் பொடியாகப் போகும். அவ்வாறாக மூழ்குவோர் தீவினை கெடுதல் அரிய தாகுமோ? இத்தீர்த்த்தில் இந்திரன், நான்முகன், திருமால், அருந்தவ முனிவர் முதலிய பலரும் வந்து மூழ்கிப்பயன்பெறுவார்கள். இந்தத் தீர்த்தத்தில் மூழ்கி அந்தணாளர்கட்குத் தான தருமங்களைச் செய்தல்வேண்டும். பொருளற்ற வறியவர்களாக இருப்பின் இயன்ற அளவு பிறருக்கு உதவுதல் வேண்டும். நீராடுதலுக்கு இயலாதவர்கள் நீராடி வந்தவர்களைக் கண்டு போற்றல்வேண்டும். அத்தீர்த்தத்தில் நீராடி வந்தவர்களைக் காணமுடியவில்லையெனின், அத்தீர்த்தம் உள்ள திக்கை நோக்கித் தொழுது நினைத்தல் வேண்டும். இவ்வாறு செய்வது அரிய செயல் அல்லவே.

## வீரசேகரப் பெருமான்

வீரசேகரச் சிவலிங்கமானது சிவலிங்கங்களிலெல்லாஞ் சிறந்ததாகும். அந்த வீரசேகரப் பெருமானைக் காலைப்போதிற் கண்டு வணங்கினால் ஒரு பிறப்பில் செய்த தீவினை நீங்கும். நண்பகற் போதிற் கண்டு வணங்கினால் பத்துப் பிறவிகளில் செய்த

தீவினைகள் நீங்கும் மாலைப்போதில் கண்டு வணங்கினால் நூறு பிறவிகளில் செய்த தீவினைகள் ஒழியும். நள்ளிரவில் கண்டு வணங்கினால் ஆயிரம் பிறவிகளில் செய்த தீவினைகள் ஒழியும். திருவிழாக் காலங்களிலே காலை மாலை வேளைகளில் தொழுது போற்றினால், இவ்வுலக போகங்கள் பலவற்றை அடைந்து பின்னர்த் தேவர்கோ ஆவார்கள். வீரசேகரப்பெருமானுக்கு மலர்ப்பொழில் ஏற்படுத்தியவர்கள் இந்திர பதவியை அடைவர். வீரசேகரப்பெருமானுடைய பூசைக்கு வேண்டிய பொருளைக் கொடுக்கிறவர்கள் தேவர்களிற் சிறந்தவராய் வாழ்ந்து சிவலோகத்தை அடைவார்கள். வீரசேகரப்பெருமானுடைய கோயில் திருப்பணியைப் புதுக்குபவர்களும் புதிய திருப்பணிகளைச் செய்பவர்களும் அரச போகங்களை அடைந்து பிறகு கைலை செல்வார்கள். வீரசேகரப்பெருமானுக்கும் உமையாம்பிகைக்கும் பொன்னணிகளைச் செய்து புனைவோர் பெறும்பேறு விளம்புதற்கரியது. எண்ணெய், பால், தேன், தயிர், சந்தனம் முதலியவைகளை அபிடேகத்திற்குக் கொடுப்பவர்கள் அரசர்களாய்ப் பிறந்து வாழ்வார்கள். வீரசேகரப்பெருமானுக்குக் குடம் முதலிய பாத்திரங்கள் குடை கொடி முதலிய விருதுகள் ஆகியவைகளை வழங்குவோர் மண்ணுலகையும் விண்ணுலகையும் ஆள்வர். வீரசேகரப் பெருமான் கோவிலுக்குள்ளே ஒரு சிவலிங்கத்தை அமைப்பவர்கள் பிறகு தெய்வமே ஆவர். பசு நெய்யினாலாவது எண்ணெயினாலாவது வீரசேகரப் பெருமான் கோவிலுக்குள் திருவிளக்கு ஏற்றுபவர்கள் சிவசாருபம் பெறுவர். வீரசேகரப் பெருமானுக்கு வாச நீராட்டுவோர் கைலாயத்திலே தழைத்து இருப்பார்கள். வீரசேகரப்பெருமானுக்கும் உமையாம்பிகைக்கும் இடப வாகனத் திருவிழா நடத்தியவர்கள் இந்திர பதவி, நான்முக பதவி, திருமால் பதவி, ஆகியவைகளை அடைவார்கள். வீரசேகரப் பெருமான் திருக்கோயிலுக்குள் நுழையாதவர்கள் நரகங் களிலெல்லாம் நுழைந்து பிறகு (தாய் வயிற்றுச் சூல்கள்) எல்லாவற்றிலும் நுழைவார்கள்.

## முடிவுரை

இப்படிச் சூத முனிவர் இயம்பிய வீரவனப் பெருமையைக் கேட்ட நைமிசவன முனிவர்கள் அவரைப் போற்றினார்கள், பிறகு சூதமுனிவரோடு வீரவனத்தை அடைந்து சிவகங்கையிலே முழுகினார்கள். வீரசேகரரையும் உமையாம்பிகையையும் தொழுது போற்றினார்கள். சிலநாள் அங்குத் தங்கியிருந்தார்கள். பிறகு வீரசேகரப் பெருமானிடம் விடைபெற்று நைமிச வனத்தை அடைந்தார்கள்.

## நூற்பயன்

இந்த வீரவனப் புராணத்தைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் மண்ணுலகும் விண்ணுலகும் போற்றச் சிறந்த வாழ்க்கையை அடைவார்கள். இந்த வீரவனப் புராணம் இருக்கும் இல்லத்திலே பொன், மணி முதலிய செல்வ நலங்களெல்லாம் சிறந்து விளங்கத்திருமகள் மனமகிழ்ந்து அமர்ந்திருப்பாள்.

காமேவு திருவீரை நகர்வாழ்க
உமையாண்டாள் கருணை வாழ்க
பாமேவு வெண்ணீறுங் கண்மணியும்
ஐந்தெழுத்தும் பரவி வாழ்க
தேமேவு வீரசே கரர்வாழ்க
அவர் அடியார் செறிந்து போற்றப்
பூமேவு மணிமன்றுள் இனிதெடுத்த
குஞ்சிதச்செம் பொற்றாள் வாழ்க.

## வீரவனப்புராணம் உரைநடை முற்றும்.

வானேறு துங்க மதிசூடும் வீர வனேசருநல்
மானேறு கண்ணி உமையாம் பிகையும் மகிழ்வினுடன்
ஆனேறி வீதி அடைந்தருள் கோலம் அடைந்து கண்டோம்
ஊனேறு மிவ்வுடம் பெய்திய பேரின்பம் ஓங்கிடவே.

# சாக்கோட்டையில் கல்வெட்டுக்கள் பல இருக்கின்றன.

## அவைகளில் ஒன்று

ஸ்ரீவீரசேகரர் கோவிலில் மஹாமண்டபத்திற்குள் புகுமிடத்தில் கதவுநிலைக்கு வடபுறம் எழுதப்பெற்றிருக்கும் விபரம்:-

கல்வெட்டு ஆராய்ச்சியாளர்களால் எடுக்கப்பெற்ற நம்பர் A R No. 55/of 46/47

நாயனாருக்கு நம் பெயரால் கட்டின பராக்கிரம பாண்டியன் சந்திக்கும் நாம் பிறந்தநாள் ஆனி அவிட்டம் தீர்த்தமாக எழுந்தருளுகிற திருநாளுக்கு நாள்முதல் சந்திராதித்தவரை செல்லக்குடுத்தோம். நம் ஓலை பிடிபாடாகக்கொண்டு கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொ...........

## இதன் சாரம்

பராக்கிரம பாண்டியன் தன்பெயரால் கோவில் தொடங்கிய "பராக்கிரம பாண்டியன் சந்தி" என்ற விசேட பூஜையின் செலவிற்காகச் செய்த தர்மத்தைக் கூறுகிறது. இந்தப் பூஜை அரசன் பிறந்த மாத நக்ஷத்திரமான ஆனி அவிட்டம் தோறும் நீடிப்பதற்காகக் கட்டளை இடப்பெற்றுள்ளதாகத் தெரிகிறது,

---

குறிப்பு: இன்றும் வருடந்தோறும் ஆனிமாதம் அவிட்ட நக்ஷத்திரத்தில் தீர்த்தம் கொடுக்கும் திருவிழா நடந்து வருகிறது.

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

# வீரவனப் புராணம்

## கடவுள் வாழ்த்து

### அழகுவிநாயகக்கடவுள்

சீர்பூத்த பொதுவடியர் சிறப்படியர் பாற்பொதுவுஞ் சிறப்பு நாளுங்
கூர்பூத்த வவருயிரா மெய்ப்புணர்வு மாய்ப்பொலிதல் குறிப்பிற் றோன்ற
நார்பூத்த பொதுச்சிறப்புப் புணரெழுத்தா லாமழகு நாமம் பூண்டு
கார்பூத்த வீரவனத் தமர்கடாக் களிற்றினடி கருதி வாழ்வாம். (1)

### வீரசேகரநாதர்

பூமேவு காதரனுஞ் சீதரனு மோதரனும் புகழ்ந்து போற்றத்
தேமேவு பொற்பகத்தார் கற்பகத்தார் புனைகுவவுத் திண்டோள் வேந்தும்
பாமேவு விண்ணவரு நண்ணவருங் குரைத்தென்னும் பயனே நல்கி
மாமேவு வீரவனத் தமர்வீர சேகரர்தாள் வணக்கஞ் செய்வாம். (2)

பரசுகழுக் கடைசூலம் பினாகமலை சுவற்றுகணைப் பகழி யாதி
விரசுபல தொழிற்படா விதமெதிர்த்த பகைமுருக்கி வீரந் தோற்றி
யரசுமுதல் வானோரு மேனோரும் போற்றெடுக்க வமர்தற் கேற்ப
வரசுகுண வீரவனத் தமர்வீர சேகரர்தாள் வணங்கி வாழ்வாம். (3)

### உமையம்மை

எமையம்மை யடையாம லிம்மையினெவ் வகைநலமு மெய்தி யான்ற
கமையம்மை வரும்பணியக் கண்டனமென் பார்குழுவுட் கலப்பித் தாள்வா
ளமையம்மை புயங்குழலாக் கொடுவீர சேகரர்பா லருளின் மேய
வுமையம்மை திருவடியா மிருபோது முப்போது முன்னி வாழ்வோம் (4)

பாயமலர்க் கருங்குழலுஞ் செவ்வாயும் வெண்ணகையும் பசிய தோளு
மேயவருள் பொழிவிழியுந் திருமுகமு மங்கலப்பொன் மிடறுந் தேசி
னாயபர ஞானநிலை கொங்கையுஞ்செங் கையுமருங்கி னவிர்செம்பட்டுந்
தூயமறை முடிபுணரா வுமையம்மை திருவடியுந் துதித்து வாழ்வாம். (5)

### சபாநாயகர்

படிமுதனா லிரண்டாய தூலமே னியுமனுமுற் பகரா றாய
மடிவரிய சூக்குமமே னியுமதிசூக் குமமேனி மயமே யாகக்
கடிதலிலா வவ்வதிசூக் குமமேனி நோக்கியுளங் களிப்ப வேத
முடிபுரையு மணிமன்று ணடநவிலும் பெருவாழ்வை முன்னி வாழ்வாம். (6)

### சிவகாமியம்மை

எச்சமெனல் சிலதவிரச் செயவெனும்வாய் பாட்டுவினை யெச்ச மும்பார்
மெச்சவினை முதலினொடு பிறவுமேற் றிடுமெனுஞ்சொல் வீணே யாகக்
கச்சமிலின் புயிரடைய நடங்காண்பா ளென்றறிஞர் கருதி யேத்த
நிச்சமது கண்டுவப்பித் தருள்பரிபூ ரணிபதமுண் ணிறுத்திவாழ்வாம். (7)

### தக்ஷிணாமூர்த்தி

விதியமையப் படைத்தலரி புரத்தல்வேண் டாவுருக்கொள் விதத்திற் கேற்ப
மதியமையப் படித்தல்குரு மொழிகேட்டல் சாதனநன் மாண்பி னிற்றல்
பதியமையத் திருவபிடே கங்கோடல் வேண்டாத பண்பிற் றானே
பொதியமையப் பொலிகல்லா லடியமரா சிரியனடி புகழ்ந்து வாழ்வாம். (8)

### வயிரவக்கடவுள். வேறு.

ஈங்கோபா மாறங் கோநின் னிகலெறி குவமென் றென்மு
னாங்கோபா தரவா யஞ்சொ லணங்குறை நாவி னாலும்
வேங்கோபா நலக்கூ ராழி விண்டுவுந் துணுக்குற் றஞ்சச்
சாங்கோபாங் கங்கைப் பெற்ற சதுரனாந் தம்பி ரானே. (9)

### அழகுவிநாயகக்கடவுள். வேறு.

பொழிகரட மதகயவ தனமுமதி லொருகோடும் புழைக்கை வீச்சுங்
குழிவிழியு நால்வாயும் படுபுகரும் பெருவயிறுங் குறிய தாளு
மொழிவில்கரு மூடிகமும் படைத்தழகு விநாயகனென் றொருபேர் பூண்டு
பழிதபவாழ் வித்தகனை நினைந்துதுதி புரிந்துபதம் பணிந்து வாழ்வாம். (10)

### முருகக்கடவுள்.

பொருவருமொண் பசுமுகிலே மயிலதன்மே லிளங்கதிரே பொலங்கூர்மேனி
வெருவருமக் கதிருமிழ்ந்த மதிக்கலையே புண்டரமா விளங்கு நீறு
மருவருமக் கலைவளைந்த வுடுக்கணமே மார்பின்முத்த வடமென் றாய்ந்தோர்
ஒருவருமன் பொடுதுதிக்க மகிழ்முருக னிருசரண முளங்கொள் வாமே. (11)

### திருநந்திதேவர். வேறு.

ஐந்தொழின் முதல்வ னாய வைந்துமா முகத்தோன் றேற்ற
வைந்தெழுத் துண்மை தேறி யைந்தெனுந் தடையு நீத்திட்

டைந்தின்மே லருட்க லப்புற் றைந்தெனு நிலையி னின்ற
வைந்துரு வுடையான் பாத மைந்துறுப் பாலுந் தாழ்வாம். (12)

### அகத்தியமுனிவர்

நள்ளுபு வருந்தும் வானோர் படுந்துயர் நாசஞ் செய்வான்
உள்ளுபு கடனீர் முற்று மோருழுந் தளவைத் தாக
வள்ளுபு பருகிக் கங்கை யாற்றினை யடக்கி வண்சீர்
எள்ளுபு பொலியுஞ் சீர்பெற் றிருப்பவன் றுணைத்தாள் போற்றி. (13)

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

தருகலி யாண மென்று தகுமுத னிலையி லாது
வருதொழிற் பெயர்க்கு முத்தி மாண்பொரு ளென்ப ராய்ந்தோர்
பெருமண நல்லூ ரந்தப் பேச்சுர வுறப்பு துக்கி
யொருவற வுலகுய் வித்த வொருவனுக் கன்பு செய்வாம். (14)

### திருநாவுக்கரசு நாயனார்

சொல்லரும் படைக ளெல்லாந் தொழிற்படா வண்ணம் வைத்தே
வெல்லரும் பகையு றுப்பால் வெல்லும்வித் தகனே போன்று
புல்லருஞ் சூலம் பெற்றும் பொருதொழின் மாற்றித் தெவ்வை
யல்லரும் வாக்கால் வென்ற வண்ணலை யெண்ணு வாமே. (15)

### சுந்தரமூர்த்தி நாயனார்

நெருப்புமே னோக்கி நிற்கு நில்லாது நீரவ் வாறென்
றருப்புநீர் ஞாலங் கூறு மம்மொழி பழுதே யாக
விருப்புமே வையா றேக விழையொராற் றுறுநீர் வெள்ளிப்
பொருப்புநேர் நிற்கப் பாடும் புலவனுக் கடிமை செய்வாம். (16)

### மாணிக்கவாசக சுவாமிகள்

உயிர்முழு தடிமை மற்றைப் பொருண்முழு துடைமை யென்னுஞ்
செயிரினன் மொழியுட் கொண்டு சிவபிரா னுக்கே தன்னை
யயர்வரு மடிமை யாக்கிப் பொருளுமற் றவற்கே யாக்கி
மயர்வரு மின்பம் பெற்ற வாதவூர் முதலை யுள்வாம். (17)

### சண்டேசுர நாயனார்

பண்ணருஞ் சிறப்பிற் பூசை பரமனைப் பெரிது செய்து
மெண்ணருந் தனைச்சற் றார்வத் தினியபூ சனைசெய் யாரேற்
கண்ணரும் பயன்கா ணாராய்க் கழிந்துமா ழாந்து சோர
நண்ணரும் பெருமை பெற்ற நம்பனைப் புகழ்ந்து வாழ்வாம். (18)

### அறுபத்துமூவர். வேறு.

அளவி றீமை யமைந்தவென் னுள்ளமும்
அளவி னன்மை யமைந்தகண் ணாகச்செய்
தளவில் சீர்த்தி யறுபத்து மூவரும்
அளவி லாவரு ளாலமர் வாரரோ. (19)

### பஞ்சாக்கரதேசிகர். வேறு.

இனியொரு பிறப்பு மெய்தோ மெடுத்தபல் பிறப்புஞ் செய்த
கனிதவப் பயத்தி னாலே காசினிப் பயனா யுள்ள
பனிமலர்ப் பொழில்சூழ் தென்னா வடுதுறைப் பதியின் மேய
புனிதநன் னமச்சி வாய குரவனைப் போற்று வோமே. (20)

### அம்பலவாணதேசிகர். வேறு.

பரவுமறைப் பயனெனுமைந் தெழுத்தினனைத் துந்தெரியப் பகர்ந்து தீராக்
கரவுதவிர்த் தொளிர்பதமுந் தலைச்சூட்டி யெனையாண்டு கருணை கூர்ந்து
விரவுபொழிற் றுறைசையிற்சுப் பிரமணிய தேவனொடும் விளங்கி யோவாக்
குரவுபுனை பரசிவனம் பலவாணற் கியற்றலொன்றுங் குறித்தி லேனே. (21)

### மற்றைச்சிவநேசர்கள். வேறு.

வையகம் பரவும் வீர வனச்சிவ பெருமான் கோயின்
மெய்யகம் படித்தொண் டாற்றும் விருப்பினர் நீற்றுச் சார்பு
பொய்யகந் தவிர்த்துக் கொண்ட புண்ணிய ராய யார்க்கு
மையகம் படியச் செய்வா மரும்பெற லிலாப மோர்ந்தே. (22)



## அவையடக்கம்.

தண்ணிய நீறு பூசித் தவாதகண் மணியுந் தாங்கி
யெண்ணிய வெழுத்தோ ரைந்து மிதயத்துப் பதித்து வாழும்
புண்ணிய வணிகர் கேட்ப வீரையூர்ப் புராணஞ் சூதர்
பண்ணிய மொழிபெ யர்த்துப் பாடுத லுற்றேன் மன்னோ. (1)

ஒருவன சரனை யாள்வா னுட்டுளை யிரும்பு தாக்கத்
திருமுடித் தழும்பொன் றேற்றான் சிறியனேன் றனையு மாள்வான்
பொருவருஞ் செவிவெ துப்பும் புன்சொலு மேற்பா னென்றே
திருவள ரவன் புராணந் தமிழினாற் செப்ப லுற்றேன். (2)

மன்னவர் குலத்தோர் கண்டன் றனையருள் வழங்கிக் கொண்ட
முன்னவ னிழிகு லத்தோர் புளிஞனு முத்தி யெய்தத்
தன்னருட் கொள்ளு நீராற் சான்றவர் செய்யுட் கோளோ
டென்னிழி கவியுங் கொள்கை யெற்றைக்கும் வழக்கான் மன்னோ. (3)

வேறொன்று செய்கை வல்ல வித்தக னெனல் விளக்கப்
பாறொன்று சூலத் தண்ணல் வீரையைப் பலவாச் செய்தான்
மாறொன்று சிறியேன் செய்யும் வழுக்கவி யனைத்து மான்றோர்
பேறொன்று கவிக ளாகப் பண்ணுதல் பெரிய தன்றே. (4)

★ ★ ★

## சிறப்புப்பாயிரம்

ஏற்றஞ்சால் பெருமான் வீரை யிருந்தமிழ்ப் புராணஞ் செய்தான்
ஊற்றஞ்சால் கலைக ளெல்லா முண்மையே விளங்கத் தேர்ந்து
தேற்றஞ்சா லறிஞர் போற்றத் திரிசிரா மலையில் வாழுந்
தோற்றஞ்சால் புகழ்மீ னுட்சி சுந்தர நாவ லோனே.

ஆகத்திருவிருத்தம் 27.

★ ★ ★

## திருநாட்டுப்படலம்

பரவு பேரருட் டிருவுரு வுமையொரு பாகர்
அரவு சூடிய வீரசே கரரினி தமரு
உரவு சேர்தல முதற்பல கொண்டினி தோங்கிப்
புரவு மேவிய பாண்டிநாட் டணிசில புகல்வாம். (1)

அகனி லத்துயிர் முதற்பல வுயிர்களு மளித்தாங்
குகன்ம றுத்தரு ளொருத்தியை மகளெனப் பெற்று
மகனெ னப்படாப் பரமனு மருமக னாக
நகன்ம கிழ்ச்சியிற் பெற்றது பாண்டிநன் னாடு. (2)

குன்று நேர்முலைத் தடாதகைக் கோமளக் கொழுந்தி
னன்று தீர்மணங் கண்டுவப் புற்றது மன்றி
யொன்று பேரெழிற் றெய்வதப் பிடியுயர் மணமு
நன்று கண்டுவப் புற்றது பாண்டிநன் னாடு. (3)

சொல்ல நீடிய பெரும்புகழ்ச் சடைமுடி துணிந்து
வெல்ல வேறுவெண் ணீறுருத் திராக்கமிம் மூன்றும்
புல்ல வாதரித் தொருவர்பே ரருளொடு புரக்க
நல்ல மாதவம் புரிந்தது பாண்டிநன் னாடு. (4)

மதிவி ராவிய சைவமே பொருளலால் வழுத்துந்
துதிவி ராவிய சமயம்வே றின்றெனத் துவன்று

பதிவி ராவிய நாடெலாந் தெளிதரப் பண்ணு
நதிவி ராவிய திறத்தது பாண்டிநன் னாடு. (5)

மிக்க செல்வருங் கலைஞரும் விடுபடார் மேவத்
தக்க பொன்மணி யாகர மளவறத் தாங்கித்
திக்க வாவுறு விளையுண்முற் பல்லவுஞ் சிறந்து
நக்க மேன்மையிற் பொலிவது பாண்டிநன் னாடு. (6)

## மழைவளம்

வெளியெ னப்படுஞ் சிவபிரான் மேனியில் வெண்ணீ
றொளிபெ றப்புனைந் தாங்குவெண் முகின்மிசை யுற்று
நளிக டற்புனல் குடித்துநால் வாயதள் போர்த்தாங்
களியு றக்கறுத் தொய்யென மீண்டும்விண் ணடைந்து. (7)

பொங்கு வீரைநீர் வாய்வைத்துக் குடித்திடும் போழ்தத்
தெங்கு மொண்டுகிர்க் கொடிதடை யியற்றுத லெண்ணி
யங்கு நின்றெடுத் தவனியெண் கருபமு மறியத்
தங்கு மாற்றலி னிறைத்தெனத் தடித்துற வீசி. (8)

பற்று வையக முய்யயாம் பொழிந்ததண் பாணி
வற்று மாகவர்ந் துடற்றிடு வேனிலின் வன்மை
யெற்று மாநில முணர்தர வதன்வலி யின்றே
முற்று மாபுரிந் திடுதுமென் றிடித்துற முழங்கி. (9)

தங்கு தண்மைகூர் தமிழ்வரை முதற்பல சைல
மெங்கு மாதவத் தியைந்தவெப் பிரிதாப் பொதிந்து
கொங்கு வார்குழ லுமைமணா ளன்குறிப் பவர்பாற்
பொங்கு பேரருள் பொழிந்தெனப் பெருமழை பொழிந்த. (10)

தீட்டு வான்புக ழிந்திர னாதியர் செறிந்து
கோட்டு மால்வரை களெச்சிவக் குறியெனக் குறித்துப்
பாட்டு மாமறை பகர்தரு சகத்திர தாரை
யாட்டு மாறெனப் பொழிந்ததா ரைகண்முகி லனைத்தும். (11)

வரைநி றைந்தது மரம்பல செறிபெருங் கானத்
தரைநி றைந்தது தண்பணை யோடைசூழ் மருத
நிரைநி றைந்தது நெய்தலங் கைதைசூழ் கானற்
றிரைநி றைந்தது சிவவியா பகமென வெள்ளம். (12)

வழுதி தன்பொரு ளாயினுங் கொடைத்தொழின் மாண்பாற்
பழுதில் வாத்வூர்ப் பிரானையே பாரெலாம் புகழு
முழுதும் வாரிநீ ராயினு முகிலையே யன்றி
யெழுது ஞாலமவ் வாரியைப் புகழுவ திலையே. (13)

மேய மாமழை மிகப்பெய்து முகிலெலாம் விளர்த்த
சேய வேரிகால் கலங்கனீர் நிறைதலிற் சிவந்த
காய வேமுயல் வேனில்செய் வெப்பெலாங் கரிந்த
பாய பாரிட மங்குரித் திடுபுலாற் பசந்த. (14)

வேண்டு நீர்பொழி யாவிடிற் காற்பெரு விலங்கு
பூண்டு வாடுத லயர்த்திடா தியல்கரும் புயல்கள்
ஆண்டு நீர்பொழி வளஞ்சொல்வா ரெவர்திணை யைந்துள்
ஈண்டு வண்பெருங் குறிஞ்சியின் வளஞ்சிறி திசைப்பாம். (15)

## குறிஞ்சிவளம்.

சந்த னாசல முதலிய வரையெலாந் தழுவி
யெந்த நாளுநங் குமரவேள் காணிகொண் டிருந்து
வந்த நான்முக னாதியோர்க் காரருள் வழங்கிப்
பந்த நாசமுஞ் செய்கின்றாற் சொல்வரைப் பண்பு. (16)

வள்ளி நாயகி நலமிகு காதலின் மருவி
வெள்ளி மால்வரைப் பிரான்மகன் வீற்றிருப் பதனை
யுள்ளி வானவர்க் கிறையினும் பேருவப் புற்றுத்
துள்ளி வாழ்குவர் பொருப்பரா வயின்வளந் தொகுத்தே. (17)

தெய்வ யானையை வேட்டமு தமும்பல திருவு
மெய்து வானுல கிருக்கையை விருப்புறா வெம்மான்
கொய்ம லர்க்குழல் வள்ளியோ டேனன்மாக் கொண்டு
மெய்வ ளந்தழீஇ வரையமர் தரினெது மிகுமே. (18)

முருக வேளினி தமர்தலி னாரண முடியோ
தருக வாழ்வென வருளுமை யாண்மடித் தலமோ
பெருக வாதரம் புரிபெருந் தொண்டர்த மனமோ
குருக வாவுகைக் கொடிச்சியர் குலாயவக் குறிஞ்சி. (19)

நம்மை யாடரு வெள்ளிலை வேற்படை நம்பி
கொம்மை வெம்முலைக் கோற்றொடிக் கொடிச்சியோ டமருஞ்
செம்மை சேரிடஞ் சிவணுறி னுறும்பல சிறப்பென்
றம்மை மாரிகண் டாடுதோ கைகளவ ணமரும். (20)

அருளு ருக்கொடு பல்லுயிர் களும்புரந் தளிக்கும்
வெருளு ருச்சுடர் வேற்படைத் தம்பிரா னந்த
மருளு ருக்கொடு நமக்குமாட் சிமைவயக் கினனென்
றிருளு ருத்தபு மணிவரைத் திமில்பல விணர்க்கும்.

கால காலர்தம் புயத்தினு முடியினுங் கமழும்
பால வாகிய மழவிளஞ் சேய்மலர்ப் பதத்தின்

மேல வாந்தவ முணர்ந்துவெவ் வராப்படம் பைத்தாற்
போல வாவயின் மலர்வன பொலிதருந் தோன்றி. (22)

குளவன் மாமுடி யாட்டுத லேனலிற் கொண்ட
வளநன் மாவொடுங் கலந்தினி தூட்டுதன் மதித்துப்
பிளவி லாவரைச் சாரலெங் கணுமிகப் பிறங்கி
யுளநி லாமிளங் கதிர்நிகர்த் தொளிர்செந்தேத் தடையே. (23)

முழுது நம்முரு வேரம்பன் கொள்ளுமா முயன்றே
யெழுது சீர்மிக நமக்கியை வித்தசீ ரிளவல்
பழுது தீர்தர வமரிட மென்றுறப் பயில்வ
கொழுது பல்வரி வண்டுணக் கடாம்பொழி குன்றம். (24)

தோகை மாமயில் வாகனப் பிரானடி தொழுவான்
ஓகை கூரவெத் திணையினுள் ளவருமாங் குறுகை
யாகை யாலொரு திணையெனற் கடாப்பெருங் குறிஞ்சி
வாகை யென்சொனா முல்லையின் வளஞ்சிறி திசைப்பாம். (25)

## முல்லைவளம். வேறு.

வாய்ந்தபல விடங்களுளும் வைகுந்தஞ் சிறந்ததென
வேய்ந்தபரி சனஞ்சூழ வினிதமருந் திருநெடுமால்
ஆய்ந்தகட வுளுமானா னம்மகவு மாய்வளர்ந்தான்
றோய்ந்தவன வளநோக்கி யென்னிலினிச் சொல்லுவதென். (26)

திரையெறிபாற் கடற்றுயிலுஞ் செங்கண்மால் பாறயிர்நெய்
வரையறைதீர் தரக்கவரும் வாஞ்சையா னெனக்கருதி
யுரைசிறந்த முல்லைநிலத் தொழியாது பயிலுவன
தரைநனையப் பொழிதீம்பாற் றடஞ்செருத்தற் குடம்பலவும். (27)

தங்களினத் தொருபிணையைப் புணர்ந்தொருதை யலையீன்று
திங்கண்முடிப் பரனிளஞ்சேய் தெவ்விமகிழ் தரக்கொடுத்து
நங்கள்குலக் கொருபெருமை நாட்டினா னெனக்குரங்க
மங்களவின் மாலையினா லமருமா வயினகலா. (28)

தனியமரு மாலாய தையன்முலை தழுவுதற்குப்
பனியமரு மதியமுடி யந்திவா னிறப்பகவ
னனியமருங் காதலொடு நன்னுபுநிற் றலைமானு
மினியமரும் பிறைதோய மிகப்பூத்த நிலைக்கொன்றை. (29)

மணமகன்றன் முலைபுணர வந்தொருபா னிற்பதுணர்ந்
தணவுமொரு விளையாட்டா லம்புயக்கை வளையாழி
புணரவமை மான்மகளும் பல்லுருவம் பொருந்தியமர்
குணமெனவெங் கணுமமர்வ கொழுமலர்செற் றியகாயா. (30)

உருவுபல கொள்ளினுமியா னுனைத்தழா தொழிகுவலோ
மருவுதிற முணரென்று வடிவுதா னும்பலகொண்
டொருவுதலி லாப்பெருமா னுவந்தணையுந் திறமானும்
பொருவுதவிர் பன்மதலை கிளைகளிற்பூ வையைத்தழுவல். (31)

மாயவனை யெம்பெருமான் மகிழ்ந்துதழு வும்பொழுது
தூயவவன் மேனியிடைத் துவன்றியெழும் வேரன்னப்
பாயமத லைக்கிளைகள் பல்பூவை மெய்வருட
வாயவழி யிழிந்தோடு மப்பூவை மலர்பொழிதேன். (32)

மணங்குலவு பசுந்துளவ மல்கியவப் பெருவனத்தின்
குணங்குலவத் தெரிந்தொருமால் குடிகொள்ளா விடினளவா
வணங்குதிரை நிலமகளு மலர்மகளு மற்றையரு
மிணங்குதிறம் பலசெயினு மெய்தியமா லிரிப்பர்களோ. (33)

மருவவொரு கால்விளர்த்து மற்றையொரு காற்கறுத்தும்
வெருவமகிழ் தரப்பயிலும் வியன்கொண்மூ வெப்பொழுது
மொருவரிய கருமைதரு மொருகரிய மாலென்று
திருவமிகு பெருவனத்துச் செறிந்துவப்புச் செயுமழையால். (34)

தொல்லைவர கெண்சாமை சொன்னல்பல பயறுமலிந்
தெல்லையிலா வளம்பொலிய வெண்ணில்பசுக் களுமலியக்
கல்லையொரு குடையாக்கொள் காகுத்த னினிதளிக்கு
முல்லைவள மென்பகர்ந்தா மருதவளஞ் சிலமொழிவாம். (35)

## மருதவளம்

தருநிதிய மணிசுரபி தண்ணமுதம் பரிகரியே
ருருவவயி ராணியரம் பையராதி யுவக்கும்வள
மருவியொளிர் விண்புரக்கும் வானவனே தெய்வதமாய்ப்
பொருவறக்காத் தளிக்குமெனிற் புகலவெளி தோபணைச்சீர். (36)

தாம்பெருகற் கேதுவாய்த் ததையுமுகி லூரிறைவ
னோம்புநிலங் களிகூர வொண்பொருனை வளவையை
பாம்புநதி மதுநதியென் றிவைமுதலாம் பற்பலவுந்
தேம்புதலி லாதுமிகப் பெருகிவருஞ் செய்கையவே. (37)

செறுவொருமூ வகைப்படுவ சிலைத்துவரு நதிதாமே
யுறுபுனறந் திடக்கோட லுயர்ந்தகுலை யேரிகளாற்
பெறுவகையுய்த் திடக்கோடல் பெய்ம்முகிலா னிரம்பேரி
மறுவறநல் கிடக்கோட லெனவழுதி நன்னாட்டில். (38)

ஓவுடைய முட்டிமத கூடுராய்ப் புகுந்தெழுந்து
பாவுடைய கால்வழிபோய்ப் பண்ணைதொறும் புனல்பரக்க

